# பொருளடக்கம்

# கௌதம புத்தர்

(கி மு. 573 - 493)

புத்தர் பெருமானின் இயற்பெயர் சித்தார்த்தர்; குடும்பப் பெயர் கௌதமர். அவர் ஞானமடைந்த பிறகு ஏற்பட்ட பெயரே புத்தர். பிற்காலத்தில் அவர் தம்மைப்பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம், ‘புத்தர்’ என்றோ, ‘ததாகதர்’ என்றோ கூறிக்கொள்வது வழக்கம். புத்தர் என்றால் பூர்ண ஞானம் பெற்றவர். ததாகதர் என்றால் முன்னோர் (முந்திய புத்தர்கள்) வழியிலே செல்பவர் என்று பொருள்.

வட இந்தியாவில் கோசலநாட்டின் வட பகுதியில், கபிலவாஸ்து நகரில் 2,500 ஆண்டு கட்கு முன்பு அவதரித்த பெரியார் புத்தர். வீரமும் வலிமையும் மிகுந்த சாக்கிய குலத்தைச் சேர்ந்த மன்னர் சுத்தோதனநக்தப் குமாரர் அவர். எழில் மிகுந்த யசோதரை அவர் மனைவி. அவருக்கு இராகுலன் என்ற ஒரு குமாரனும் இருந்தான். அவர், தமது 29 ஆவது வயதில், இவர்கள் அனைவரையும் விட்டுப் பிரிந்து, நாடு, நகரம், ஆட்சி அனைத்தையும் கைவிட்டு வனத்திற்குச் சென்று 6 வருடம் அருந்தவம் செய்தார். அவருடைய 35 ஆவது வயதில் அவருக்கு ஞானோதயம் உண்டாயிற்று; உலகின் இயற்கை அநித்தியம் என்று கண்டார்; உலகில் ஒவ்வொரு பொருளுக்கும், ஒவ்வொரு பிராணிக்கும் ‘ஆன்மா’ என்று தனியாக ஒன்றில்லை என்று கண்டார். இவற்றை ‘அநித்தியம், துக்கம், அநான்மிகம்’ என்று சொல்வார்கள். உயிர்களின் துக்கத்திற்குக் காரணம் பிறப்பு, பிறப்புக்குக் காரணம் ஆசை, ஆசைக்குக் காரணம் அறியாமை(அவித்தை) என்ற விவரங்கள் யாவும் அவருக்கு விளக்க மாயின. ஆசைகளை அவித்து மெய்யறிவு பெற்ற நிலையில், அவர் தாம் சம்பந்தப்பட்ட மட்டில், அப்பொழுதே நிருவாணம் என்கிற முக்தி நிலையை அடைந்து விட்டார். அவர் ஞானமடைந்து நிருவாணம் பெற்ற இடம் புத்த கயையில் ஓர் அரசமரத்தடியில்.

உலகமக்கள் படும் துன்பங்களைப் பார்த்து, கருத்தில்லாமல் அவர்கள் சுயநல வெறியுடன் ஒடிச்சாடி மீளாத துக்கத்தில் ஆழ்வதைக் கண்டு, அவர் மனம் இரங்கினார். தாம் பெற்ற இன்பத்தை வையக மக்கள் அனைவரும் பெற வேண்டும் என்று அவருக்கு அருள் பிறந்தது. புத்த கயையிலிருந்து நேராகக் காசி நகருக்குச் சென்றார். அங்கே சாரநாத் என்ற இடத்தில் அவருடைய பழைய சீடர்கள் ஐவர் இருந்தனர். அவர்களுக்கு அவர் தாம் கண்ட தருமத்தை முதன் முறையாக உபதேசித்தார். இதைத்
'தரும சக்கரப்பிரவர்த்தனம்' என்பர். அதாவது, புத்தர் அற ஆழியை உருட்ட ஆரம்பித்தல் என்று பொருள். அதன்பிறகு அவர் 45 ஆண்டு கள் வாழ்ந்திருந்து, நாடும் நகரும், காடும் மலை யும் கால் நடையாகச் சென்று மக்களுக்கும் மன்னர்களுக்கும் உபதேசம் செய்து, அற ஆழியை உருட்டிக் கொண்டேயிருந்தார். இலட்சக்கணக்கான மக்கள் அவருடைய பௌத்த சமயத்தை மேற்கொண்டனர். ஆயிரக் கணக்கான பிக்குகள் (பௌத்தத் துறவிகள்) சேர்ந்தனர். அவர்கள் எல்லோரையும் சேர்த் துப் பௌத்த சங்கம் அமைக்கப் பெற்றது. பௌத்த சமயிகளுக்குப் புத்தர், தருமம், சங்கம் என்ற மூன்றுமே அடைக்கலங்கள். பின்னால் கி.மு. 493 ஆம் வருடம் புத்தர், தமது எண்பதா வது வயதில், குசீநகர் என்னுமிடத்தில் பூத உடலை நீத்து மகாபரி-நிருவாணம் அடைந் தார்.

புத்தருடைய சமயம் அருள் மயமானது. அதில் சாதிகள் இல்லை; ஏற்றத் தாழ்வுகள் இல்லை; யாரும் சேரலாம். சமயங்களிலே அது ஒரு குடியரசு எனலாம். சுயநலத்தை ஒழித்து, ஆசைகளையும் வெறுப்புக்களையும் அகற்ற வேண்டும்; உள்ளத்தில் எல்லா உயிர்களிடத் தும் அன்பு மலர்ந்து பரிமளிக்கச் செய்ய வேண் டும்; ஒழுக்கம் என்னும் உறுதியான பாறைமீது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும்; மெய்யறிவின் மூலம் அறியாமையைப் போக்க வேண்டும்; அறியாமை போனால் ஆசை ஒழி யும்; ஆசை ஒழிந்தால் பிறவியும்

ஒழியும்; நிலை யான நிருவாணப் பேறு கிடைக்கும்-இதுவே பௌத்த தருமம் மக்களுக்குக் காட்டிய வழி.

புத்தர், 'துக்கம், துக்க காரணம், துக்க நிவிர்த்தி, துக்க நிவிர்த்தி வழி' என்று கூறிய வைகள் 'நான்கு வாய்மைகள்' எனப்படும். துக்க நீக்கத்திற்கு அவர் கூறிய மார்க்கம் எட்டுப்படி களுள்ள 'அஷ்டாங்க மார்க்கம்' என்பது. நற் காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நல்லூக்கம், நற்கடைப்பிடி, நல்லமைதி என்றவையே அந்த எட்டுப்படிகள். [1] மனிதன் திடீரென்று தீயோனாவதுமில்லை; நல்லவனாவதுமில்லை; பலநாள், பல வருடப் பழக்கத்தினாலேயே அவன் குணம் அமை கிறது. எனவே ஆசை அழிந்து, அறியாமை நீங்கி, மெய்யறிவு பெறுவதற்கு மேற்கூறிய எட்டுப்படிகளும் பயிற்சி நிலையங்களாக அமைந்துள்ளன. மனம், மொழி, மெய்களில் தூய்மை, நியாயமான வாழ்க்கை முறை கருத்து டைமை, இடைவிடாத ஊக்கம்-இவைகளின் உதவியால் சந்தேகமும், மயக்கமும் இல்லாத அறிவு பெற்றுத் தியானம், சமாதி மூலம் மெஞ் ஞானத்தையும் முடிவில் நிருவாண முக்தியை யும் பெறமுடியும்.

புத்தர் அருளிய அறவுரைகளும், சங்க விதி களும், அவரைப்பற்றிய வரலாறுகளும் பௌ த்தத் திருமுறைகளில் மூன்று பிரிவான தொகுதி களாக உள்ளன. அவைகளுக்கு, 'திரிபிடகங் கள்' என்று பெயர். (பிடகம்-பெட்டி, அல்லது கூடை; திரி-மூன்று) அவை விநய பிடகம், சுத்த பிடகம், அபிதம்ம பிடகம் என்பவை. தம்ம பதம் என்ற இந்நூல் சுத்த பிடகத்திலுள்ள ஐந்து பகுதிகளில், குத்தக நிகாயம் என்ற பகுதியிலுள்ளது. இந்துக்களுக்குப் பகவத்கீதை எப்படியோ, அப்படிப் பௌத்தர்களுக்கு இது முக்கியமானது. பகவத் கீதையைப் போலவே, இதுவும் ஐரோப்பா முழுவதிலும் புகழ் பெற் றிருக்கிறது. புகழ் பெற்ற ஆசிரியர்கள் இதை லத்தீன், ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு முதலிய ஐரோப்பிய மொழிகளில் பெயர்த்து

வெளியிட் டிருக்கின்றனர். ஆங்கில மொழியில் மட்டுமே இதற்கு 40-க்கு மேற்பட்ட மொழிபெயர்ப்புக் கள் உண்டு. இதைப் புகழ்ந்து போற்றாத ஆசிரியரைக் காண்பது அரிது. திரிபிடகத்தில் புத்தருடைய உபதேசங்கள் பல உரையாடல் களாக இருக்கின்றன. இவைகளையெல்லாம் பொறுமையோடு, நிதானமாகப் படித்து அறிந்து கொள்வதைப் பார்க்கினும் தம்ம பதத்தின் சூத்திரங்களைப் படித்தல் எளிது. இந்தச் சூத்திரங்கள் சுருக்கமாயும், பொருள் நிறைந்தும், விறு விறுப்பாயும், உணர்ச்சிமயமாயும், கவி தைப் பண்புடனுமிருப்பதால், இவைகளைப் பலரும் விரும்பிப் படிப்பது இயற்கை. மேலும் பௌத்த சமயக் கொள்கைகள் பலவற்றையும், வாழ்க்கைக்கு வேண்டிய நீதிகளையும் இவை களிலே தெளிவாய்க் காணலாம்.

தம்ம பதத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கவேண் டிய நூல் தமிழ் மறையாகிய திருக்குறள். ‘இது நமது மொழியிலுள்ள திருவள்ளுவரது திருக் குறளைப் போன்று அத்துணைச் சிறப்பு வாய்ந்தது.’ [2]

தம்ம பதத்தின் பெருமையைப் பற்றி ஜெர்மன் மொழியில் புத்த சரித்திரத்தை எழுதிய ஹெர்மான் ஒல்டன்பர்க் என்ற பேராசிரியர்
கூறியுள்ளதைப் பார்க்கினும் அதிகமாக எதுவும் கூறமுடியாது. அவருடைய புகழ்மாலை வருமாறு:

> பௌத்த சமயத்தைப் பற்றித் தெளி வாய்த் தெரிந்து கொள்வதற்கு, பௌத்த தரும ஆராய்ச்சிகளை ஆரம்பிக்கும் போதே, ஆராய்ச்சியாளனுக்கு (ஒரு பெரியவரு டைய) விருத்தியுள்ள கைகளால் தம்ம பதத்தை அளிப்பதை விட மேலான காரியம் எதுவும் இருக்கமுடியாது. தம்மபதம் தன்னி கரற்ற அழகுடையது; பொருள் நிறைந்த பழமொழிக் களஞ்சியம்; பௌத்த சமயத் தைத் தெரிந்து கொள்ள உறுதி கொண்ட எவரும் திரும்பத் திரும்பப் பார்க்க வேண்டிய நூல் இது. [3]

தமிழ் நாட்டில் ஆயிரம் ஆண்டுகட்கு மேலாகப் பௌத்தசமயம் நிலைத்து வளர்ந்து செழித்திருந்தது. தமிழர் புத்தரைத் 'தயா வீரன், தரும ராஜன், அருளறம் பூண்டோன், அறத்தகை முதல்வன், புத்த ஞாயிறு, போதி மாதவன், மன்னுயிர் முதல்வன், பிறவிப் பிணி மருத்துவன்' என்று பல படப் புகழ்ந்து போற்றி வந்திருக்கின்றனர். தமிழ் நாடெங்கும் பௌத்தப் பள்ளிகள் நிறைந்திருந்தன. காஞ்சீபுரம், நாகைப்பட்டினம், மதுரை முதலிய பெரு நகரங் களிலெல்லாம் பௌத்தம் நிலைபெற்றிருந்தது. தமிழ்ப் பிக்குகள் இலங்கை முதலிய வெளி நாடுகளுக்குச் சென்று சமயப் பிரசாரம் செய்து வந்ததுடன், பல பௌத்த நூல்களையும் இயற்றி வைத்தனர். இவர்களுள் தர்மபால ஆசாரியார், ஆசாரிய புத்த தத்த தேரர், போதி தருமர் முதலியோருடைய, புகழ் இன்றும் மங்காது இருந்து வருகிறது. போதி தருமர் காஞ்சிபுரத்திலிருந்து சீனா சென்று பௌத்த தருமப்பிரசாரம் செய்தவர், மேலும், கோவல னுடைய தந்தையாரான மாசாத்துவர் பௌத்தர். மாதவியின் மகளான மணிமேகலை துறவு பூண்டு பௌத்தப் பிக்குணியாக வாழ்ந்தாள். இளம்போதியார், சீத்தலை சாத்தனார் முதலிய பல தமிழ்ப் புலவர்கள் பௌத்தராயிருந்தனர். மற்றும் புத்த மங்கலம், போதி மங்கலம், சங்க மங்கலம், புத்த குடி முதலிய பல தமிழ் நாட்டு ஊர்களின் பெயர்களைப் பார்த்தாலே இங்கு பௌத்தம் நிலவியிருந்த பெருமை தெளிவாக விளங்கும்.

தமிழிலுள்ள ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றான 'மணிமேகலை' பௌத்த நூல். 'மணி மேகலைச் சொல்லெலாம் அறம்; பொருளெ லாம் அறம்; மணிமேகலையின் நாடெலாம் அறம்; காடெல்லாம் அறம், புத்தர் பெருமானைத் தமிழிற் காட்டும் ஒரு மணி நிலையம் மணி மேகலை' என்று தமிழ்ப் பெரியார் திரு. வி. கல்யாணசுந்தரர் அதைப் புகழ்ந்துள்ளார். 'வளையாபதி'யும் 'குண்டலகேசி'யும் முழு நூல்களாக அகப்படாமலே போய்விட்டன. ஆயினும் இவைகளைப்

போன்ற பௌத்த நூல் கள் நூற்றுக்கணக்காகத் தமிழில் இருந்திருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை.

(தம்மபதம் பௌத்தத் திருமுறைகளின் ஒரு பகுதி.) எங்கும் புகழ் பெற்ற இத்தம்மபதத்திற்கு எத்தனையோ மொழிபெயர்ப்புக்கள் இருந் திருக்கலாம். உரை வடிவாக மட்டுமின்றிப் பாடல்களாகவும் அது தமிழில் வழங்கிவந்திருக்க வேண்டும். ஆனால் மருந்துக்கு ஓர் ஏட்டுப் பிரதிகூட இல்லாமல் அவைகளும் மற்றைப் பௌத்த நூல்களோடு மறைந்தொழிந்து விட் டன. தம்மபதத்திற்குத் தமிழில் புது மொழிபெயர்ப்புக்கள் செய்யும்படி ஏற்பட்டுவிட்டது!

**ப. ராமஸ்வாமி**

[இந்த இயலில் ஒவ்வொரு கருத்தும் இரண்டு சூத்திரங்களால் விளக்கப் பெற்றிருத்தலால், 'இதற்கு இரட்டைச் செய்யுட்கள்' என்று பெயர்.]

1. மனிதரை மனோதர்மமே உருவாக்குகின்றது; சிந்தனைகளே அதன் அடிப்படை; சிந்தனைகளாலேயே அது ஆக்கப்படுகின்றது. மனிதன் தீய எண்ணத்தோடு பேசினாலும், செயல்புரிந்தாலும்,வண்டிச் சக்கரம் மாட்டைத் தொடர்ந்து செல்வதுபோல், துக்கம் அவனைத் தொடர்ந்து செல்லும். (1)

2. மனிதனை மனோதர்மமே உருவாக்குகின்றது; சிந்தனைகளே அதன் அடிப்படை; சிந்தனைகளாலேயே அது ஆக்கப்படுகின்றது. மனிதன் நல்லெண்ணத்துடன் பேசினாலும் செயல்புரிந்தாலும், நிழல்தொடர்ந்து செல்வதுபோல், இன்பம் அவனைத் தொடர்ந்து செல்லும். (2)

3. 'என்னை நிந்தித்தான், என்னை அடித்தான்,என்னை வென்றான். என்னைக் கொள்ளையிட்டான்'-இத்தகைய எண்ணங்களை உடையாரிடம் துவேஷம் நீங்காது நிலைத்திருக்கும். (3)

4. 'என்னை நிந்தித்தான், என்னை அடித்தான்,என்னை வென்றான், என்னைக் கொள்ளையிட்டான்'-இத்தகைய எண்ணங்கள் இல்லாதாரிடம் துவேஷம் நில்லாது நீங்கும். (4)

5. இவ்வுலகில் எக்காலத்தும் பகைமை பகைமையால் தணிவதில்லை; பகைமை அன்பினாலேயே தணியும். இதுவே பண்டை அறநெறி. (5)

6. 'நமக்கும் இங்கே முடிவுண்டு' என்பதைச் சிலர் அறிவதில்லை! ஆனால் அறிந்தவர்களுடைய பிணக்குகள் உடனே தீர்ந்துவிடும். (6)

7. புலன்களை அடக்காமல், உணவில் நிதானமில்லாமல், மடிமையில் ஆழ்ந்து, வீரியம் குறைந்து,

இன்பங்களுக்காகவே வாழ்ந்து வருவோனை, வலியற்ற மரத்தைக் காற்று வீழ்த்துவதுபோல, மாரன் [4] முறியடிக்கிறான். (7)

8. புலனடக்கத்தோடு, நிதான உணர்வுடனும், நல்லறத்திலே நாட்டத்துடனும், நிறைந்த வீரியத்துடனும் இன்பங்களை எதிர்பாராமல் வாழ்ந்து வருவோனை, பாறைகள் நிறைந்த மலையைச்சூறாவளி அசைக்க முடியாதது போல மாரன் வெல்லமுடியாது. (8)

9. மனமாசுகள் நீங்காமல், எவன் அடக்கமும் உண்மையும் இல்லாதவனோ, அவன் சீவர உடைக்கு [5] அருகனல்லன். (9)

10. மனமாசுகள் நீங்கி, எவன் சகல சீலங்களிலும் நிலைத்து நின்று, அடக்கமும் உண்மையும் உள்ளவனோ, அவனே சீவர உடைக்கு உரியவன். (10)

11. பொய்யில் மெய்யைக் கற்பனை செய்துகொண்டு, மெய்யில் பொய்யைக் காணும் மருளுடையார்.

மெய்ப்பொருளை ஒருபோதும் அடைவதில்லை; அவர்கள் வெறும் ஆசைகளைத் தொடர்ந்து அலைவார்கள். (11)

12. மெய்யை மெய்யாகவும், பொய்யைப் பொய்யாகவும் காணும் தெளிவுடையார், மெய்ப்பொருளை அடைவார்கள். அவர்களே மெய்யான வேட்கையுடையவர்கள். (12)

13. கூரை செம்மையாக வேயப்படாத வீட்டினுள் மழை நீர் பாய்வதுபோல் நன்னெறிப் பயிற்சியில்லாத மனத்தினுள் ஆசைகள் புகுந்துவிடுகின்றன. (13)

14. கூரை செம்மையாக வேயப்படாத வீட்டினுள் மழை நீர் இறங்காததுபோல், நன்னெறிப் பயிற்சியுள்ள மனத்தினுள் ஆசைகள் நுழைய முடியா. (14)

15. தீய கருமத்தைச் செய்தவன் உலக வாழ்வில் வருந்துகிறான். மறுமையிலும் வருந்துகிறான்;

இரண்டிலும் அவனுக்குத் துயரமே. தானே செய்த தீய கருமத்தின் விளைவைக் கண்டு இவன் வருந்திப் புலம்புகிறான். (15)

16. நற்கருமத்தைச் செய்தவன் உலக வாழ்வில் இன்பமடைகிறான், மறுமையிலும் இன்பமுறுகிறான்; இரண்டிலும் அவனுக்கு இன்பமே. தான் செய்த நற்கருமத்தின் விளைவைக் கண்டு அவன் மகிழ்ந்து இன்பமடைகிறான். (16)

17. தீய கருமத்தைச் செய்தவன் உலக வாழ்வில் வருந்துகிறான், மறுமையிலும் வருந்துகிறான்; இரண்டிலும் அவனுக்குத் துயரமே. 'நான் செய்த பாவம்!' என்று அவன் வருந்துகிறான். நரகத்திலும் அவன் அதிகமாய் வேதனைப்படுகிறான். (17)

18. நற்கருமத்தைச் செய்தவன் உலக வாழ்வில்இன்பமடைகிறான், மறுமையிலும் இன்பமுறுகிறான்; இரண்டிலும் அவனுக்கு இன்பமே. 'நான் செய்த புண்ணியம்!' என்று அவன் இன்பமடைகிறான்.பேரின்ப வீட்டிலும் அவன் மேலும் அதிகமாய்இன்புறுகிறான். (18)

19. சாத்திரங்கள் அனைத்தையும் கற்று ஒப்பித்தாலும், வாழ்க்கையில் அவற்றின்படி நடக்காதவன், ஊரார் பசுக்களை கணக்கிட்டு எண்ணும் ஆயனைப் போன்றவன். சமய வாழ்வில் சமணன் [6] அடைய வேண்டிய பயனை அவன் பெற முடியாது. (19)

20. சாத்திரங்கள் சிலவற்றையே கற்றவனாயினும் வாழ்க்கையில் அவற்றின்படி நடப்பவனாயும்,ஆசை, துவேசம், மோகம் முதலியவற்றைக் களைந்து, மெய்யறிவும், தெளிந்த சித்தமும் பெற்று, இவ்வுலகிலும் பரத்திலும் உலக ஆசைகளிலிருந்து நீங்கப் பெற்றவனாயும் உள்ளவனே சமணன் அடையவேண்டிய பயனைப் பெறுவான். (20)

21. கருத்துடைமையே நித்தியமான நிருவாண மோட்சத்திற்கு [7] வழி; மடிமையே மரணத்திற்கு வழி. கருத்துடையார் இறப்பதில்லை; மடிமையுடையார் இருக்கும்போதே இறப்பவராவர். (1)

22. கருத்துடைமையின் நன்மையைத் தெளிவாக உணர்ந்த அறிவாளர்கள் அதிலே களிப்படைகின்றனர். ஆன்றோர் காட்டிய நெறியில் ஆனந்தமடைகின்றனர். (2)

23. அறிவாளர்கள் எப்போதும் தீவிர முயற்சியுடனும், தளராத உறுதியுடனும், தியானத்துடனும், மகோன்னதமான விடுதலைப்பேறும் ஆனந்தமுமாகிய நிருவாணத்தை அடைகின்றனர். (3)

24. கருத்துடைய ஒருவன், விழிப்படைந்து, நினைவு குன்றாமல், நற்கருமங்களைச் செய்து கொண்டும், ஆலோசனையுடன் வினை புரிந்துகொண்டும், தன்னடக்கத்தோடு தருமத்தை அநுசரித்து வாழ்ந்தால், அவன் புகழ் ஓங்கி வளரும். (4)

25. அறிஞன் விழிப்படைந்து, கருத்துடனும், நிதானத்துடனும், அடக்கத்துடனும், ஒழுக்கத்துடனும், வெள்ளத்தால் சேதமடையாத ஒரு தீவைப்போல் தன்னைப் பலப்படுத்திக் கொள்கிறான். (5)

26. அறிவில்லாத மூடர்கள் மடிமையுள் வீழ்கின்றனர்; அறிஞன் கருத்துடைமையைத் தனது முதன்மையான அருந்தனமாகப் பாதுகாக்கிறான். (6)

27. மடிமையுள் விழவேண்டாம். காமத்தோடு புலன்களின் இன்பங்களில் புகவேண்டாம். கருத்தோடு தியானம் செய்பவன் எல்லையற்ற இன்பத்தை அடைவான். (7)

28. அறிவாளி, விடாமுயற்சியால் மடிமையை விரட்டிவிட்டு, ஞானமாகிய கோபுரத்தில் ஏறிச் சோகமற்ற நிலையில் இருந்து கொண்டு, கீழே சோகத்தில் ஆழ்ந்துள்ள மக்களைக் காண்கிறான். மலைமேலிருந்து

கீழே சமவெளியைப் பார்ப்பதுபோல், அவன் மற்றையோரைப் பார்க்கிறான். (8)

29. அறிவாளி, மடிமையில் ஆழ்ந்தவர் நடுவே முயற்சியுடையோனாகவும், உறங்குவோர் நடுவே விழிப்புள்ளவனாகவும் இருப்பான்; பந்தயக் குதிரை வாடகைக் குதிரையைப் பிந்தவிட்டு விட்டு முன்னேறிப் பாய்வது போல், அவன் மற்ற யாவர்க்கும் முன்னால் செல்கிறான். (9)

30. மகவான் [8] கருத்துடைமையால் தேவர்களின் அதிபதியாகி உயர்ந்தான். மக்கள் கருத்தில்லாமையைப் போற்றிப் புகழ்கின்றனர்; கருத்தில்லாமை எப்பொழுதும் இகழப்படுகிறது. (10)

31. மடிமையைக் கண்டு அஞ்சி, கருத்துடைமையில் களிப்படையும் பிக்கு [9] , உள்ளத்தைப் பிணிக்கும் சிறிய, பெரிய தளைகளை யெல்லாம் அனலைப் போல் எரித்துக்கொண்டு செல்கிறான். (11)

32. மடிமையைக் கண்டு அஞ்சிக் கருத்துடைமையில் களிப்படையும் கண்டு, அஞ்சிக் கருத்துடைமையில் நிருவாண மோட்சத்தின் அருகில் இருப்பவன். (12)

33. காப்பதற்கும், அடக்குதற்கும் அரிதான சபல சித்தத்தை அறிவாளி, வேடன் தன் அம்பை நிமிர்த்துவது போல, நோக்குகிறான். (1)

34. தண்ணீரிலிருந்து வெளியே தரையில் எடுத்தெறியப்பட்ட மீன் துடிப்பதுபோல், (ஆசை காட்டும் தீய) மாரனின் பிடியிலிருந்து தப்புவதற்காக நமது சித்தம் துடிக்கின்றது. (2)

35. அடக்குவதற்கு அரிதாயும், துடிப்புள்ளதாயும், தன் போக்குப்படி திரிவதாயுமுள்ள சித்தத்தை அடக்குதல் நல்லது; அடக்கியாளப்பெற்ற சித்தம் சுக மளிக்கும். (3)

36. அறிவதற்கு அரிதாயும், மிக நுணுக்கமானதாயும், தன் போக்குப்படி திரிவதாயுமுள்ள சித்தத்தை அறிஞன் காத்துவர வேண்டும்; காக்கப் பெற்ற சித்தம் சுகமளிக்கும். (4)

37. நெடுந்தூரம் தனியே சஞ்சரிப்பதாயும், உருவமற்ற தாயும் இதயக்குகையுள் அமர்ந்துள்ள சித்தத்தை அடக்கியாள்பவர் மாரன் பிடியிலிருந்து விடுபட்டவராவர். (5)

38. நிலையில்லாத சித்தத்தையுடையவரும், உண்மையான தருமத்தை அறியாதவரும், மனத்தின் சாந்தி குழம்பியவரும் பூரண ஞானத்தைப் பெற முடியாது. (6)

39. எவனுடைய சிந்தை (குற்றங்களால்) கலக்கமடையாமல் இருக்கிறதோ, எவனுடைய சிந்தை குழப்பமற்றுள்ளதோ, எவன் புண்ணியம், பாவம் (இரண்டையும்) பற்றிச் சிந்திப்பதில்லையோ, எவன் விழிப்புடன் உள்ளானோ, அவனுக்கு அச்சமில்லை. (7)

40. உடல் மட்கலம்போல் (உடைவதாக) உள்ளதை அறிந்து ஒருவன் தன் சித்தத்தைக் கோட்டைபோல் அரண் செய்து, அறிவு என்னும் ஆயுதத்தால் மாரனை எதிர்த்துத் தாக்க

வேண்டும்; வென்ற பின்னும் அவனிடம் கவனமாயிருந்து வென்றதைக் காக்கவேண்டும். (8)

41. அந்தோ; வெகு சீக்கிரத்தில், எரிந்து பயனற்றுப் போன சுள்ளிபோல் இந்த உடல் உணர்ச்சியற்று, வெறுக்கப்பட்டுத் தரைமீது கிடக்கும்! (9)

42. பகைவன் பகைவனுக்குச் செய்யும் தீமையைப் பார்க்கினும், நிந்திப்பவன் எதிரிக்குச் செய்யும் தீமையைப் பார்க்கினும், தவறான வழியில் திரும்பிய சித்தம் அதிகக் கேடு விளைவிக்கும். (10)

43. தாயும், தந்தையும், சுற்றத்தாரும் நமக்குச் செய்யும் உதவியைப் பார்க்கினும், நல்ல வழியில் திரும்பிய சித்தம் அதிக உதவியளிக்கும். (11)

44. இந்த உலகத்தையும், தேவர்களுடைய எமலோகத்தையும் வெற்றி கொள்பவர் யார்? (பூந்தோட்டத்திலே) பழக்கமுள்ளவன் நல்ல மலர்களைக் கண்டுபிடிப்பது போல், தெளிவாக விளக்கியுள்ள தரும மார்க்கத்தைக் கண்டு பிடிப்பவர் யார்? (1)

45. இந்த உலகத்தையும், தேவர்களுடைய எமலோகத்தையும் பயிற்சியுள்ள சீடன் [10] வெற்றி கொள்வான்.பழக்கமுள்ளவன் நல்ல மலர்களைக் கண்டுபிடிப்பது போல், தெளிவாக விளக்கியுள்ள தரும மார்க்கத்தைப் பயிற்சியுள்ள சீடன் கண்டு பிடிப்பான். (2)

46. நீரில் குமிழி போலவும், கானல் நீர் போலவும் உள்ள இந்த உடலின் தன்மையை உணர்ந்து கொண்டு,அவன் மாரனின் மலர் அம்புகளை அழித்து விட்டு, எமராஜனின் கண்ணுக்குப் புலனாகாத இடத்திற்குப் போய்விடுவான். (3)

47. உறக்கத்தில் ஆழ்ந்துள்ள கிராமத்தைப் பெரு வெள்ளம் அடித்துக்கொண்டு போகிறது; அது போல் மனிதன் (வாழ்க்கையில் இன்பங்களாகிய) மலர்களைப் பறித்துக்கொண்டு அதிலே ஈடுபட்டுக்கொண்டிருக்கும் போதே மரணம் அவனை அடித்துக் கொண்டு போய்விடுகிறது. (4)

48. மனிதன் (இன்ப) மலர்களைப் பறித்துக் கொண்டிருக் கும்போது, அவன் தன் இன்பங்களில் திருப்தியடையுமுன், மனம் கலக்க முற்றிருக்கும் போதே, மரணம் அவனை வென்றுவிடுகிறது. (5)

49. மலரிலிருந்து தேன் சேர்க்கும் தேனீ, மலருக்குச் சேதமில்லாமல், அதன் வண்ணமும் மணமும் சிதை யாமல், தேனை மட்டும் கொண்டு செல்வது போலவே, முனிவன் கிராமத்தில் நடமாடவேண்டும். (6)

50. முனிவன் தன் குறைகளையும், தான் செய்யத் தவறியவைகளையும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்; பிறருடைய குறைகளையும், பாவச்செயல்களையும்அவன் கவனிக்க வேண்டாம். (7)

51. செய்கையில் காட்டாமல் ஒருவன் வாயால் மட்டும் மதுரமாகப் பேசுதல், அழகும் நிறமும் அமைந்த புஷ்பம் வாசனையற்றிருப்பதுபோல், பயனற்றதாகும். (8)

52. சொல்லிய வண்ணம் செயல்புரியும் ஒருவனுடைய மதுரமான பேச்சு, அழகும் நிறமும் அமைந்த புஷ்பம் வாசனையும் பெற்றிருப்பது போல், பயனளிப்பதாகும். (9)

53. புஷ்பக் குவியலிலிருந்து பலவித மாலைகள் தொடுக் கப்படுவது போல், அநித்தியமான மனிதனும் இந்தப் பிறவியில் பலவித நற்கருமங்களைச் செய்யமுடியும். (10)

54. புஷ்பத்தின் வாசனை காற்றை எதிர்த்து வீசாது;சந்தனம், தகரம் [11] , மல்லிகை முதலிய (எல்லா) மலர் களின் மணமும் அப்படித்தான். ஆனால் நன்மக் களின் (புகழ்) மணம் காற்றையும் எதிர்த்து வீசு கிறது. நல்ல மனிதனின் புகழ்மணம் நாலு திசை யிலும் பரவி நிற்கிறது. (11)

55. சந்தனம், தகரம், தாமரை, ஜவந்தி ஆகிய புஷ்ப வகைகளின் நறுமணம் நற்குணத்தின் நறுமணத் திற்கு ஈடாகாது. (12)

56. தகரம் அல்லது சந்தனத்தின் வாசனை அற்ப மானது; நற்குணமுடையவர்களின் உத்தமமான உயர் மணம் தேவர்களிடத்தும் சென்றுவீசுகிறது. (13)

57. இத்தகைய சீலங்களுடையவர்களாய், விழிப்புடன் கருத்தோடு வாழ்பவர்களாய், பூர்ண ஞானத்தால் பொலிவுற்று விளங்குவோர்களிடம் செல்ல மாரனுக்குவழி தெரியாது. (14)

58. வழியிலே கொட்டிய குப்பைக்குவியலிலிருந்து மனத்திற்கினிய மணத்துடன் தாமரை மலர்கிறது. (15)

59. அதுபோலவே, குப்பை போலுள்ள குருட்டு மக்களி டையே மெய்ஞ்ஞானச் சுடரான புத்தரின் சீடன்தனது ஞானத்தால் ஒளி வீசி விளங்குகின்றான். (16)

60. விழித்திருப்பவனுக்கு இரவு நெடிதாகும்; களைத்திருப்பவனுக்கு வழி நெடுந்தூரமாகும்; நல்லறத்தை அறியாத மூடருக்கு (ஜனன-மரணமாகிய) ஸம்ஸாரத்தொடர் எல்லையற்றதாகும். (1)

61. (ஸம்ஸார) யாத்திரையில், ஒருவன், தனக்குநிகரான அல்லது மேலான நண்பன் துணைக்குக் கிடைக்காவிட்டால், தன்னந்தனியே தொடர்ந்து செல்வானாக;மூடனுடைய துணை உதவியாகாது. (2)

62. 'என் பிள்ளைகள், என் செல்வம்' என்ற சிந்தனையால் மூடன் துயரப்படுகிறான். அவனே அவனுக்குச் சொந்தமில்லை! பிள்ளைகளும் தனமும் எப்படிச்சொந்தமாகும்? (3)

63. பேதை தன் மடமையை உணர்ந்தால், அந்த அளவுக்கு அவன் அறிவுள்ளவன்; தன்னைப் பண்டிதனாக எண்ணிக்கொள்ளும் பேதை முழுமூடனே யாவான். (4)

64. அகப்பை குழம்பின் சுவையை அறியாது; அது போல் வாழ்நாள் முழுவதும் பேதை ஞானியோடுபழகி வந்தாலும், தருமத்தை அவன் அறிவதில்லை. (5)

65. நாக்கு குழம்பின் சுவை அறிகிறது; அதுபோல்கருத்துள்ளவன் சிறிது நேரம் ஞானியோடு பழகினாலும், அவன் தருமத்தின் இயல்பைத் தெரிந்து கொள்கிறான். (6)

66. புல்லறிவுள்ள மூடர்கள் தாமே தமக்குப் பகைவர்; அவர்கள் பாவ கருமங்களைச் செய்து கொண்டு திரிகின்றனர்; அவை கசப்பான (துன்பக்) கனிகளையேஅளிக்கின்றன. (7)

67. எந்தக் கருமத்தைச் செய்தால் பின்னால் மனம்நோகுமோ, எதன் பயனை அழுதுகொண்டே அனுபவிக்க வேண்டியிருக்குமோ, அது நற்செயல் ஆகாது. (8

68. எந்தக் காரியத்தைச் செய்தால் பின்னால் மனம் இன்பமடையுமோ, எதன் பயனை உள்ளக்களிப் போடு அநுபவிக்க வேண்டியிருக்குமோ, அதுவேநற்செயல். (9)

69. பாவம் பழுத்துப் பயனளிக்காத வரையில் மூடன் அதைத் தேன் என்று விரும்புகிறான்; ஆனால் அது பழுத்துப் பயனளிக்கையில் அவன் (ஆறாத்) துயரை அடைகிறான். (10)

70. மாதக்கணக்காக மூடன் தர்ப்பைப் புல்லின் முனையினால் (துளித்துளியாக) உணவெடுத்து உண்டுவந்தாலும், தருமத்தை நன்கு அறிந்தவர்களின் பதினாறில் ஒருபகுதிக்குக்கூட அவன் ஈடாகமாட்டான். (11)

71. புதிதாய்க் கறந்த பால்போலே, பாவச்செயல் உடனே புளிப்பாக மாறுவதில்லை; நீறுபூத்த நெருப்பைப் போல் கனன்றுகொண்டேயிருந்து அது மூடனைத் தொடர்கிறது. (12)

72. (பாவகருமத்தின் தன்மையை) மூடன் அறியும்போது அவ்வறிவு அவனுக்கு நன்மையாயில்லாத தோடு அவனுக்கு இருக்கிற இன்பத்தையும் அழித்து.அவன் தலையையும் பிளக்கிறது. (13)

73. மூடனான பிக்கு போலியான புகழை விரும்புகிறான்; பிக்குகளிடையே முதன்மையாயிருக்கவும் பௌத்த மடங்களில் தலைமையாயிருக்கவும் இல்லறத்தார் தன்னை வணங்கவேண்டுமென்றும் விரும்புகிறான். (14)

74. மூடன், 'இல்வாழ்வாரும் துறவிகளும் இது என்னால் செய்யப்பெற்றது என்று நினைக்கட்டும். நல்லவை, தீயவை, ஆகிய காரியங்களில் அவர்கள் என்விருப்பப்படியே நடந்து வரட்டும்' என்று விரும்புகிறான். எனவே அவனுடைய இச்சையும் இறுமாப்பும் அதிகமாகின்றன. (15)

75. செல்வத்தை அடையும் வழி வேறு, நிருவாணத்தைஅடையும் வழி வேறு. புத்தருடைய சீடனான பிக்கு, அதை அறிந்துகொண்டு, மக்களுடைய மரியாதையை விரும்பாமல், விவேகத்தை நாடி உழைத்து வரவேண்டும். (16)

76. குற்றங்களைக் கண்டித்து, விலக்க வேண்டியவைகளை விலக்கக்கூடிய ஞானியைக் கண்டால்ஒருவன், அந்த ஞானி புதையல் பொக்கிஷங்களுக்கு வழிகாட்டுவோன் என்று கருதி, அவரைப் பின்பற்ற வேண்டும். அத்தகைய மனிதரைப் பின்பற்றுவதால் நன்மையே தவிர தீமையில்லை. (1)

77. அவர் கண்டிப்பார், அறிவு புகட்டுவார், தீயோரிடமிருந்து விலக்குவார். நல்லோர் அவரை நேசிப்பர். தீயோரே வெறுப்பர். (2)

78. தீயோருடன் சேரவேண்டாம்; இழிந்தவருடன் இணக்கம் வேண்டாம்; ஒழுக்கமுள்ளவரோடு உற வாடுக; சான்றோர் தொடர்பை மேற்கொள்க. (3)

79. தருமத்தைப் பருகுவோன். மேலோர் அறிவுறுத்திய தருமத்தில் அவன் எப்போதும் இன்புற்றுக்கொண் டிருக்கிறான். (4)

80. நீரை நெறிப்படுத்திச்செலுத்துவர் சிற்பக்கலைஞர் [12] ; அம்பை நேராக நிமிர்த்துவர் வில்லாளிகள்; மரத்தில் (சித்திரங்கள்) பொறிப்பார்கள் தச்சர்கள்; தம்மைத் தாமே அடக்கியாள்வர் அறிஞர். (5)

81. நிலையான பாறை புயல் காற்றுக்கும் அசையாம லிருப்பது போல், ஞானிகள் புகழ்ச்சிக்கும், இகழ்ச் சிக்கும் அசைவதில்லை. (6)

82. தரும உபதேசங்களைக் கேட்டறிந்த ஞானிகள் ஆழமாயும் தெளிவாயும், அமைதியாயுமுள்ள ஏரி யைப் போல், சாந்தியடைகிறார்கள். (7)

83. நன்மக்கள் எதிலும் பற்றுக் கொள்வதில்லை; இன்பங்களை விரும்பி இரைச்சல் போடுவதில்லை. சுகமோ துக்கமோ வந்தால், ஞானிகள் எழுச்சியடைவதுமில்லை; அயர்வு கொள்வதுமில்லை. (8)

84. தனக்காகவோ மற்றவர்க்காகவோ, புத்திர ஆசை, பொருளாசை, இராஜ்ய ஆசை (பிரபுத்துவத்தில் நாட்டம்)

ஆகிய ஆசைகளில்லாமல், அதரும வழி களில் இன்பவாழ்வை அடைய விரும்பாமல் வாழ்பவன் ஒழுக்கமுள்ள உரவோனாயும், ஞானியாயும், அறநெறிச் செல்வனாயும் இருப்பவன். (9)

85. மனிதர்களில் மிகச் சிலரே (நிருவாண மோட்சமாகிய) அக்கரையை அடைகின்றனர்; மற்றவர் எல்லோரும் (ஜனன-மரண ஸம்ஸாரமாகிய) இக்கரையிலேயேஉழன்று திரிகின்றனர். (10)

86. தரும உபதேசத்தைக்கேட்டு, அதன்படி நடப்போர் மறு கரையை அடைவர்-கடத்தற்கு அருமையான எமலோகத்தையும் கடந்து செல்வர். (11)

87. ஞானி இருள் வழியை நீக்கி ஒளியின் நெறியில் செல்வானாக, வீட்டை விட்டு விரும்புவதற்கு அரிய விவேகத்தை நாடித் துறவு வாழ்க்கையின் ஏகாந்த இன்பத்தில் அவன் திளைப்பானாக. (12)

88. காமிய இன்பங்களைக் கைவிட்டு, எதையும் தனதென்று கொள்ளாமல், ஞானி மனமாசுகளைஅகற்ற வேண்டும்; அந்நிலையில் அவன் ஆனந்தமடைவான். (13)

89. ஞானத்திற்கு உரிய (ஏழு) அங்கங்களில் [13] சித்தத்தை நிலைநிறுத்தி, எதிலும் பற்றுவைக்காமல், ஆசைகளை அடக்கி வென்று எவர்கள் மாசற்ற ஒளிமயமாய்த் திகழ்கிறார்களோ, அவர்கள் இந்த உலகி லேயே நிருவாண மோட்சத்தை அடைகிறார்கள். (14)

90. (ஸம்ஸார) யாத்திரையை முடித்துக் கொண்டவனுக்கு, துக்கத்திலிருந்து நீங்கியவனுக்கு, பற்றுக்கள் அனைத்தையும் அறுத்து விடுதலை பெற்றவனுக்கு, எல்லா விலங்குகளையும் உடைத்தெறிந்தவனுக்குத்துன்பம் என்பதில்லை. (1)

91. கருத்துடையவர்கள் இடைவிடாத முயற்சியுடையவர்கள். அவர்கள் ஒரேயிடத்தில் ஓய்ந்து கிடப்ப தில்லை! நீர் நிலையை விட்டுப் பறந்து செல்லும்அன்னங்களைப்போல், அவர்கள் இல்வாழ்வை விட்டுப் போகின்றனர். (2)

92. வானத்தில் பறக்கும் பறவைகளின் சுவடுகளைக்காண முடியாது; அதுபோல் சேமித்து வைத்த செல்வங்கள் இல்லாமல், அறிவுக்குப் பொருத்தமானஆகாரம் அருந்தி, பந்தங்களற்ற பரிபூர்ண விடு தலையான நிருவாணம் ஒன்றையே இலட்சிமாய்க்கொண்டவர்களுடைய வழியைப் புரிந்து கொள்ளுவதும் அரிதாகும். (3)

93. வானத்தில் பறக்கும் பறவைகளின் சுவடுகளைக் காண முடியாது; அதுபோல், ஆஸவங்களை [14] அவித்துப் பந்தங்களற்ற பரிபூரண விடுதலையான நிருவாணத்திலேயே நாட்டமுள்ளவருடைய வழி யைப் புரிந்து கொள்ளுவதும் அரிதாகும். (4)

94. தேர்ப்பாகன் குதிரைகளை அடக்கிப் பழக்கியிருப்பது போலே, இந்திரியங்களை அடக்கி, அகங் காரத்தை அகற்றி, ஆசையாகிய கறைகளில்லா திருப்பவனைக் கண்டு தேவர்களும் பொறாமைப்படுவார்கள். (5)

95. பூமியைப் போன்ற பொறுமையுடனும், வீட்டு நிலைபோன்ற உறுதியுடனும், சேறில்லாமல் தெளிந்தநீர் நிலை போன்ற தூய்மையுடையவனுக்குப் பிறப்பு மில்லை; இறப்புமில்லை. (6)

96. உண்மையான ஞானத்தின் மூலம் விடுதலை பெற்றவனுடைய மனம் சாந்தியாயிருக்கும்; சொல் சாந்தி யாயிருக்கும்; செயலும்சாந்தியாயிருக்கும். (7)

97. இன்ப துன்பங்களில் அலட்சிய முடையவனாயும்செயல்கள் ஒடுங்கிய பிறவா நிலையாகிய நிருவாண நிலையை அறிந்தவனாயும், பந்தங்கள் அனைத்தை யும் அறுத்துக்கொண்டவனாயும்; (நன்மை தீமை களுக்குரிய) எல்லாச் சந்தர்ப்பங்களுக்கும் முடிவுகட்டியவனாயும், ஆசைகள் யாவையும் அகற்றிய வனாயுமுள்ள ஒருவனே உத்தம புருஷன். (8)

98. அருகத்துக்கள் (முனிவர்கள்) எங்கே வசிக்கிறார் களோ, அது நாடாயினும், காடாயினும், பள்ளமாயினும், மேட்டு நிலமாயினும், அதுவே இரமணீயமான இடம். (9)

99. ஆரண்யங்கள் இரமணீயமானவை; ஜனங்கள்எங்கே இன்புறுவதில்லையோ அங்கே விரக்தியடைந்தவர்கள் இன்புறுகிறார்கள்; ஏனெனில் அவர்கள் காமியங்களை நாடுவதில்லை. (10)

[இந்த இயலிலுள்ள சூத்திரங்களில் 'ஆயிரம்' என்ற சொல் பலமுறை வருவதால் இயலின் பெயரே 'ஆயிரம்' என்றாயிற்று]

100. அர்த்தமற்ற பதங்களைத் தொகுத்த நூறு பாடல்கள் ஒப்பிப்பதைப் பார்க்கினும், பொருளுள்ள ஒரேபாசுரம் மேலானது; அதைக் கேட்டதும் ஒருவன் உபசாந்தி [15] அடைகிறான். (1)

101. ஒருவன் ஆயிரம் பேர் கொண்ட ஆயிரம் படைகளை வெற்றி கொள்கிறான்; மற்றொருவன் தன்னைத்தானே அடக்கி வெல்கிறான்; இவர்களுள் தன்னை வென்றவனே வெற்றி வீரருள் முதன்மையானவன். (2)

102. மற்றவர்களை வெல்வதைப் பார்க்கினும், ஒருவன் தன்னைப் பண்படுத்திக் கொண்டு, எப்போதும் புலனடக்கத்தைப் பயிற்சி செய்து, தன்னைத்தானே வெல்வது மேலானது. (3)

103. அத்தகைய ஒருவனுடைய வெற்றியைத் தேவரோ, கந்தர்வரோ, பிரம்மாவின் துணைபெற்ற மாரனோ தோல்வியாக்க முடியாது. (4)

104. மாதந்தோறும் ஆயிரம் யாகங்களாக நூறு வருடம் யாகம் செய்பவன் தம்மைத் தாமே அடக்கிக்கொண்ட ஒருவரை ஒரு கணம் வணங்குதல் அந்த நூறு வருட வேள்வியை விட மேலானது. (5)

105. வனத்தில் நூறு வருட வேள்வித் தீயைவணங்கி வந்தவன், தம்மைத் தாமே அடக்கிக் கொண்ட ஒருவரை ஒரு கணம் வணங்குதல் அந்த நூறு வருடப் பூசனையை விட மேலானது. (6)

106. புண்ணியம் பெறுவதற்காக ஒருவன் ஒரு வருடத்தில் எத்தனை வேள்விகள் செய்தாலும், அவை அனைத்தும் உத்தம ஞானி ஒருவரை வணங்குவதில் நாலில் ஒரு பகுதிக்கு ஈடாகாது. (7)

107. வயது முதிர்ந்த பெரியோரை விடாமல் வணங்கி மரியாதை செய்து வருவோனுக்கு ஆயுள், அழகு. இன்பம், வலிமை ஆகிய நான்கு பயன்களும், அதிகரிக்கும். (8)

108. தீயொழுக்கத்துடன் அடக்கமில்லாமல் ஒருவன் நூறுவருடம் வாழ்வதைக்காட்டிலும், நல்லொழுக்கத்துடன் தியானம் செய்து வரும் ஒருவன் ஒரு நாள் வாழ்வதே மேலானது. (9)

109. அறியாமையுடன் அடக்கமில்லாமல் நூறு வருடம் ஒருவன் வாழ்வதைக் காட்டிலும், ஞானத்தோடு தியானம் புரிந்துவரும் ஒருவன் ஒருநாள் வாழ்வதே மேலானது. (10)

110. ஒருவன் சோம்பலுடன் பலவீனமாக நூறு வருடம் வாழ்வதைக் காட்டிலும், வீரியத்தோடு ஒருவன் முயற்சி செய்து ஒரு நாள் வாழ்வதே மேலானது. (11)

111. (பிறப்பு, இறப்பாகிய) ஆரம்பத்தையும், முடிவையும் அறியாமல் ஒருவன் நூறு வருடம் வாழ்வதைக் காட்டிலும், அவற்றை அறிந்த ஒருவன் ஒரு நாள் வாழ்வதே மேலானது. (12)

112.

(சாவேயில்லாத) அமுத நிலையாகிய முக்தியைப் பற்றி அறியாமல் ஒருவன் நூறு வருடம் வாழ்வதைக் காட்டினும், அந்த அமுத நிலையை அறிந்து ஒருவன் ஓருநாள் வாழ்வதே மேலானது. (13)

113. உத்தம தருமத்தை அறியாமல் ஒருவன் நூறு வருடம் வாழ்வதைக் காட்டிலும், ஒருவன் உத்தம தருமத்தை அறிந்து ஒருநாள் வாழ்வதே மேலானது. (14)

114. நல்லதை விரைவாக நாடவேண்டும்; பாவத்திலிருந்து சித்தத்தை விலக்கவேண்டும்; புண்ணிய கருமத்தைச் செய்வதில் தாமதித்தால், மனம் பாவத்தில் திளைக்க ஆரம்பித்து விடும். (1)

115. மனிதன் பாவத்தைச் செய்துவிட்டால், அதையே திரும்பத் திரும்பச் செய்யாதிருப்பானாக. அவன் அதில் திளைத்திருக்க வேண்டாம்; பாவ மூட்டை மிகவும் துக்ககரமானது. (2)

116. மனிதன் புண்ணியத்தைச் செய்வானாக. அவன் அதில் திளைத்திருக்கட்டும். புண்ணிய மூட்டை மிகவும் இன்பகரமானது. (3)

117. பாவம் பயனளிக்க ஆரம்பிக்காதவரை இன்பமாய்த்தான் தோன்றும்; ஆனால் பயனைக் கொடுக்கும்போது, பாவி தன் பாவத்தை உணர்கிறான். (4)

118. நல்லவனும் தன் புண்ணியம் பயனளிக்க ஆரம்பிக்காதவரை துன்பத்தையே காண்கிறான். ஆனால் பயனைக் கொடுக்கும்போது, அவன் நன்மையையே உணர்கிறான். (5)

119. 'என் பக்கம் அண்டாது' என்று பாவத்தை இலேசாக எண்ணவேண்டாம். துளித்துளியாக விழும் தண்ணீராலேயே குடம் நிரம்பிவிடும். பேதை கொஞ்சம் கொஞ்சமாகப் பாவத்தைச் சேர்த்தாலும், அவன் பாவத்தால் நிரம்பி விடுகிறான். (6)

120. 'என் பக்கம் அண்டாது' என்று புண்ணியத்தை இலேசாக எண்ண வேண்டாம். துளித்துளியாக விழும் தண்ணீராலேயே குடம் நிரம்பிவிடும்.ஞானி கொஞ்சம் கொஞ்சமாகப் புண்ணியத்தைச் சேர்த்தாலும் அவன் புண்ணியத்தால் நிரம்பிவிடுகிறான். (7)

121. போதிய வழித்துணையில்லாத வணிகன் மிகுந்த பொருளுடன் பயமுள்ள பாதையிலே செல்லமாட்டான்; வாழ்வில் ஆசையுள்ளவன் விஷத்தை விரும்பமாட்டான்;

இவர்களைப்போலவே, ஞானிபாவச் செயல்களை விலக்கவேண்டும். (8)

122. கையில் புண்ணில்லாதவன் விஷத்தைக் கையால் தொடலாம்; புண்ணில்லாதவனை விஷம் பாதிப்பதில்லை. தீய காரியத்தைச் செய்யாதவனைப் பாவம் பாதிக்காது. (9)

123. நிரபராதியான ஒருவனுக்கு எவன் தீங்கு செய்தாலும், பாவமற்ற பரிசுத்தமான ஒருவனுக்கு எவன் தீங்கு செய்தாலும், காற்றுக்கு எதிராகத் தூவிய மண் மேலேயே வந்து சாடுவது போல், அந்த மூடனைப் பாவம் பற்றிக்கொள்கிறது. (10)

124. சிலர் கருக்குழியை அடைந்து (மறுபடி) பிறக்கிறார்கள்; பாவ கருமத்தைச் செய்தவர்கள் நிரயத்தை அடைகிறார்கள்; நற்கருமத்தைச் செய்தவர்கள் சுவர்க்கத்தை அடைகிறார்கள்;ஆஸவங்களை ஒழித்த பற்றற்றவர்கள் பரிநிருவாணத்தை அடைகிறார்கள். (11)

125. மனிதன் தன் பாவ கருமத்தின் பிடியிலிருந்து தப்பவே முடியாது; தப்பித்துக் கொள்ளும் இடம் பரந்த வானிலும் இல்லை, ஆழ்ந்த கடலிலும் இல்லை. மலையின் குகைகளிலும் இல்லை. (12)

126. மனிதன் மரணத்தின் பிடியிலிருந்து தப்பவே முடியாது; தப்பித்துக்கொள்ளும் இடம் பரந்த வானிலும் இல்லை, ஆழ்ந்த கடலிலும் இல்லை.மலையின் குகைகளிலும் இல்லை. (13)

127. தண்டனைக்கு எல்லோரும் நடுங்குகின்றனர்.மரணத்திற்கு எல்லோரும் அஞ்சுகின்றனர். மற்ற உயிர்களையும் தன்னைப்போல எண்ணி ஒருவன் கொல்லவுங் கூடாது. கொலைக்கு உடன்படவுங்கூடாது. (1)

128. தண்டனைக்கு எல்லோரும் நடுங்குகின்றனர்.வாழ்வில் எல்லோருக்கும் பிரியமிருக்கின்றது. மற்ற உயிர்களையும் தன்னைப்போல் எண்ணி ஒருவன் கொல்லவுங் கூடாது. கொலைக்கு உடன்படவுங் கூடாது. (2)

129. இன்பமாக வாழ விரும்பும் உயிர்களை ஒருவன் தன் சுகத்தை நாடித் தண்டித்துத் துன்புறுத்தினால், மரணத்திற்குப் பின் அவன் நலமடைவதில்லை. (3)

130. ஒருவன் தன் சுகத்தை நாடி, தன்னைப்போலவே இன்பத்தை நாடும் ஏனைய உயிர்களைத் தண்டித்துத் துன்புறுத்தாமலிருந்தால், மரணத்திற்குப் பின் அவன் நலம் பெறுவான். (4)

131. எவரிடத்தும் கடுஞ்சொல் பேசாதே. அதே முறையில் மற்றவர்களும் பதிலுரைப்பார்கள். கோபமான பேச்சு துக்கமளிப்பதால், பதில் பேச்சு உன்னைத் தாக்கும். (5)

132. உடைந்து போன மணி ஓசையற்றிருப்பது போல்,உன்னை நீ அடக்கிக் கொண்டு அமைதியாயிருந்தால், நீ நிருவாணத்தை அடைந்தவனாவாய்.ஏனெனில், நீ கலக்கம் நீங்கிச் செயலற்ற நிலையிலிருக்கிறாய். (6)

133. ஆயன் தன் கழியால் பசுக்களைப் புல்வெளிக்கு ஓட்டிச் செல்வது போல், மூப்பும், சாக்காடும் மக்களின் ஆயுளை ஓட்டுகின்றன. (7)

134. மூடன் பாவமான கருமங்களை அறியாமல் செய்கிறான். ஆனால் தீய மனிதன் தீயால் எரிக்கப்படுவது போல், தன் கருமங்களாலேயே வேகிறான். (8)

135. தண்டிக்கத் தகாதவர்களையும், குற்றமற்ற நல்லவர்களையும் தண்டித்துத் துயரப்படுத்துவோன்(பின் கண்ட) இந்தப் பத்து நிலைகளில் ஒன்றை அடைவான்; (9)

136. வேதனை, நஷ்டம், உடலில் சேதம், பெருநோய்கள், சித்தப்பிரமை, (10)

137. அரச தண்டனை, பயங்கரமான குற்றச்சாட்டு,பந்துக்களை இழத்தல், பொருள் அழிவு. (11)

138. அல்லது, அவன் வீடுகளில் இடிவிழுந்து எரித்தல்,மேலும், உடல் அழிந்த பின்னர் அந்த மூடன்நிரயம் புகுவான். (12)

139. மெய்ப்பொருளை உணராமல் அய்யத்தில் உழல்வோனை எதுவும் புனிதமாக்கி விடாது; ஆடையின்றி அலைதல், சடைத்தலை, புழுதியால்(உடல்) மாசடைதல், உபவாசம், வெறுந்தரையில் கிடத்தல், நீறு பூசுதல், அசைவில்லாமல் அமர்ந்திருத்தல் ஆகிய எதுவும் புனிதமாக்கி விடாது. (13)

140. ஒருவன் அலங்காரமான உடை அணிந்திருந்தாலும், அவன் தெளிந்த சிந்தையுடையவனாயும்,அமைதியானவனாயும். (பௌத்த தரும) நியமத்தில் நிற்பவனாயும், பிரமசாரியாயும், எல்லா உயிர்களிடத்திலும் (ஹிம்சை) உணர்ச்சி நீங்கியவனாயும் இருந்தால், அவனே பிராமணன்,அவனே சமணன் [16] ; அவனே பிக்கு. (14)

141. நன்கு பழக்கப் பெற்ற குதிரைக்குச் சவுக்கு அவசியமில்லை; அதுபோல் தன்னைப் பிறர் குறை கூறாதபடி பழிக்கு அஞ்சும் நாணமுள்ள மனிதன் இவ்வுலகில் இருக்கிறானா? (15)

142. நன்கு பழக்கப்பட்ட குதிரை, சவுக்கு மேலே பட்டதும் (வேகமாக ஓடுவது போல்) சிரத்தையுடனும், தீவிர முயற்சியுடனும் இருப்பாயாக.நம்பிக்கையாலும், நற்சீலங்களாலும், வீரியத்தாலும், தியானத்தாலும்,

தருமத்தை ஆராய்ந்த நிச்சயத்தாலும், ஞானம், ஒழுக்கம், கருத் துடைமை ஆகியவற்றில் நிறைவு பெற்று (உலகவாழ்வான) இந்தத் துக்கத்தை ஒதுக்கிவிடமுடியும். (16)

143. நீரை நெறிப்படுத்திச் செலுத்துவர் சிற்பக்கலைஞர்; அம்பை நேராக நிமிர்த்துவர் வில்லாளிகள்; மரத்தில் (சித்திரங்கள்) பொளிப்பார்கள் தச்சர்கள்; தம்மைத்தாமே அடக்கியாள்வர் நல்லோர். (17)

144. இந்த உலகம் எப்பொழுதும் எரிந்துகொண்டேயிருக்கையில், இங்கே என்ன சிரிப்பு? இங்கே என்ன களியாட்டம்? இருளால் மூடப்பட்டிருக்கும் நீங்கள் ஏன் ஒளியைத் தேடுவதில்லை? (1)

145. இந்த உடலாகிய வர்ணம் தீட்டிய பொம்மையைப்பார்! இது புண்கள் நிறைந்தது, (எலும்புகளாலும் சதையாலும்,) ஒன்றாகக் கோர்த்து வைக்கப்பட்டது. நோய்க்கு இடமானது, பல எண்ணங்கள் நிறைந்துள்ளது, ஆனால் நிலையில்லாதது! (2)

146. இந்த உடல் நலிந்து தேய்வது, இது நோய்களின் கூடு, மிகவும் நொய்மையானது. இந்த அசுத்தக் குவியல் உடைந்து சிதறிப்போகும்; வாழ்வின் முடிவு சாவுதான். (3)

147. சரத்காலத்தில் காற்றில் பறக்கும் சுரைக்கொடி போன்ற இந்த வெள்ளை எலும்புகளைப் பார்ப்பவனுக்கு என்ன இன்பம் இருக்கிறது? (4)

148. அஸ்திகளைக் கொண்டு ஒரு மாளிகை கட்டி ஊனும் உதிரமும் கலந்த சாந்து பூசப்பட்டிருக்கிறது; இதிலே வசிக்கின்றன முதுமையும், மரணமும், கர்வமும், கபடமும். (5)

149. அரசர்களுடைய அழகிய தேர்களும் அழிவடைகின்றன. அவ்வாறே உடலும் மூப்படைந்து அழியும்.ஆனால் நல்லோரின் தருமம் மட்டும்ஒரு போதும் முதுமையடைந்து பழுதாவதில்லை.இவ்வாறு நல்லவர் நல்லவர்களுக்கு உபதேசம் செய்கின்றனர். (6)

150. கல்வியில்லாதவன் மாடுபோல் முதிர்ந்து வளர்கிறான்; அவனுடைய ஊன்தான் பெருகுகிறது, ஆனால் அறிவு வளர்வதில்லை. (7)

151. பலவிதமான பிறவிகளை நான் எடுத்தாயிற்று- இந்த (உடலாகிய) குடிலைக் கட்டியவனை நான் இரவும் பகலும் தேடியும் காணவில்லை. மீண்டும் மீண்டும் பிறப்பது துக்கமாகவேயுள்ளது. (8)

152. குடிலைக் கட்டிய கொற்றனே [17] இப்போது உன்னைக் கண்டுகொண்டேன்! குடிலை மறுபடி நீகட்ட முடியாது. உன்னுடைய உத்திரங்கள் எல்லாம் உடைந்துவிட்டன. குடிலின் முகடும் குலைந்து விட்டது. என் சித்தம் நிருவாணப் பேற்றில் இலயித்து விட்டது; (அதனால்) ஆசைகள் அவிந்தொழிந்து விட்டன!. (9)

153. இளமையிலே பிரம்மசரியத்தைப் பேணாதவரும்,செல்வத்தைத் தேடிக்கொள்ளாதவரும், மீன்களில்லாத குளத்தில் இரை தேடிக் காத்திருக்கும் கிழக் கொக்குப் போலத் தவிப்பார்கள். (10)

154. இளமையிலேயே பிரம்மசரியத்தைப் பேணாதவரும், செல்வத்தைத் தேடிக்கொள்ளாதவரும், உளுத்துப்போன விற்களைப்போல், பழமையை எண்ணி எண்ணிப் பரிதவிப்பார்கள். (11)

155. ஒருவன் தன்னைத்தான் நேசிப்பானாகில், அவன் தன்னையே கவனமாய்க் காத்து வரவேண்டும்.இரவில் மூன்று யாமங்களில் ஒன்றிலாயினும் ஞானிவிழிப்புடன் கவனமாயிருப்பானாக. (1)

156. ஒவ்வொரு மனிதனும் முதலில் தான் நன்னெறியில் நிலைபெறவேண்டும்; பிறகுதான் மற்றவர்களுக்குப் போதிக்க வேண்டும். இத்தகைய ஞானி கிலேசமடைவதில்லை. (2)

157. மற்றவர்களுக்குப் போதிக்கிறபடி ஒருவன்தன்னைப் பண்படுத்திக் கொள்ளட்டும். தன்னை நன்கு அடக்கியாண்ட பிறகு, பிறரை அடக்கியாள முடியும். ஏனெனில் தன்னை அடக்கிக் கொள்வதே கடினமான காரியம். (3)

158. ஒருவன் தானே தனக்குத் தலைவன். வேறு யார் தலைவனாயிருக்க முடியும்? தன்னை நன்கு அடக்கி வைத்துக் கொண்டால், ஒருவன் பெறு தற்கரிய தலைவனைப் பெற்றவனாவான். (4)

159. மூடனுடைய பாவம் அவனிடமே பிறந்தது,அவனே படைத்தது. வயிரம் மற்ற மணிகளை அறுப்பதுபோல், அவன் செய்த பாவமே அவனை அழித்து விடும். (5)

160. மாலுவக் கொடி கடம்ப மரத்தைச் சுற்றிப் படர்ந்து மரத்தையே அமுக்கி விடுவது போல், ஒருவனுடைய தீவினையே அவனை அமுக்கிவிடுகிறது;பகைவர் செய்ய விரும்பும் தீமையை அவன் தானாகவே செய்து கொள்கிறான். (6)

161. தீமை பயக்கும் தீவினைகளைச் செய்தல் எளிது;நன்மை பயக்கும் நல்வினையைச் செய்தலே மிகவும் கஷ்டமாகும். (7)

162. முனிவர்களும், மேலோர்களும், தரும வழியில் நடப்பவர்களும் போதிப்பதை மடமையுள்ள மனிதன் புறக்கணித்து விட்டுத் தீய நெறியில் செல்கின்றான்;

(அதனால்) கட்டகப்புல் [18] (தன் கனியாலே தன்னை அழித்துக் கொள்வது) போல், தன்னையே அழிக்கும் கனியை-வினைப்பயனை- அடைகிறான். (8)

163. ஒருவன் தானாகவே பாவம் செய்கிறான், தானே தனக்குக் கேடு தேடுகிறான். ஒருவன் தானாகவே பாவத்தை விலக்குகிறான். தானே தன்னைப் புனிதமாக்குகிறான். சுத்தமும் அசுத்தமும் அவன் செயலே; எவனும் பிறனைப் புனிதமாக்குவதில்லை. (9)

164. எவ்வளவு உயர்ந்ததாயினும் பிறருடைய கடமைக்காக எவனும் தன் கடமையைக் கைவிடலாகாது; தன் கடமையைக் கண்டறிந்த பின்பு, அவன் அதையே நன்றாக ஆற்றி வருவானாக. (10)

165. அதருமத்தில் செல்ல வேண்டாம்; அசட்டையாக வாழ வேண்டாம். தவறான கொள்கையைக் கைக்கொள்ள வேண்டாம். உலகத்தின் (பற்றோடு)உறவு கொள்ள வேண்டாம். (1)

166. விழித்தெழுக! கருத்தில்லாமல் இருக்கவேண்டாம் தரும ஒழுக்கத்தைக் கடைப்பிடி. தரும வழியில் நடப்பவனுக்கு இகத்திலும் சுகம். பரத்திலும் சுகம். (2)

167. தரும ஒழுக்கத்தில் நடப்பாயாக, தீயொழுக்கத்தில் செல்லவேண்டாம், தரும வழியில் நடப்பவனுக்கு இகத்திலும் சுகம், பரத்திலும் சுகம். (3)

168. வையகத்தை நீர்க் குமிழியாகவும், கானல் நீராகவும் காண்பவனை எமதர்மன் கண்டுகொள்ள முடியாது. (4)

169. இந்த உலகம் அரசனுடைய அலங்கரிக்கப் பெற்றதேர் போல் ஜொலிப்பதை வந்து பார்! பேதைகள் இதிலே ஆழ்ந்து விடுகிறார்கள். ஞானிகளுக்கு இதிலே பற்றில்லை. (5)

170. முன்னால் சிந்தனையற்றிருந்து, பின்னால் விழிப்படைந்து தெளிந்தவன், மேகத்திலிருந்து விடு பட்ட சந்திரனைப் போல் இந்த உலகை ஒளிபெறச் செய்கிறான். (6)

171. பாவத்தை நல்வினையால் மறைக்கும் ஒருவன் மேகத்திலிருந்து விடுபட்ட சந்திரனைப்போல், இந்த உலகை ஒளிபெறச் செய்கிறான். (7)

172. இருளே இவ்வுலகின் இயற்கை; இங்கு சிலரே(விழி பெற்று) உண்மையைக் காண முடியும்.வலையிலிருந்து தப்பிய பறவைகள் போல, சிலரேசுவர்க்கம் செல்கின்றனர். (8)

173. அன்னங்கள் கதிரவன் வழியில் செல்கின்றன;அவை தங்களுடைய அற்புத ஆற்றலால் ஆகாயவழியே செல்கின்றன. மாரனையும் அவன் படைகளையும் வென்ற

ஞானிகள் (அவ்வாறே) இந்த உலகை விட்டு வெளியே செல்கிறார்கள். (9)

174. ஒப்பற்ற தருமத்தைக் கைவிட்டுப் பொய்யே பேசியும், பரலோகத்தைப் பரிகசித்தும் வருவோன் செய்யத் தகாத பாவம் எதுவுமில்லை. (10)

175. கருமிகளே தேவர் உலகை நண்ணுவதில்லை மூடர்களே ஈகையைப் போற்றுவதில்லை. ஆனால் ஞானி ஈகையில் இன்புற்று,(அதனால்) மறு உலகிலும் சுகமடைகிறான். (11)

176. பாருலகை ஒரு குடைக்கீழ் ஆள்வதைப் பார்க்கினும் சுவர்க்கம் புகுவதைப் பார்க்கினும், எல்லா உலகங்களின் மீதும் ஆதிக்கியம் செலுத்துவதைப் பார்க்கினும் உயர்வானது சோதாபத்திப் [19] பயன் அடைவது. (12)

177. எவரும் வெல்ல முடியாத வெற்றியை அடைந்தவர் புத்தர்; இந்த உலகில் எவரும் அணுக முடியாத வெற்றியை அடைந்தவர் புத்தர். அவர் எல்லையற்ற உணர்வுடையார்; (பிறப்பும் இறப்பு மாகிய) பாதையற்றவர். அத்தகைய புத்தரை எந்த வழியில் இழுத்துச் செல்ல முடியும்? (1)

178. வலை போன்றதும், விஷம் போன்றதுமான ஆசைத்தளை, எதனாலும் வழி தவறாத புத்தரை-எல்லையற்ற உணர்வுள்ளவரை-(பிறப்பும் இறப்பு மாகிய) பாதையற்றவரை-எந்த வழியில் இழுத்துச் செல்ல முடியும்? (2)

179. கருத்தோடு தியானத்தில் ஆழ்ந்தவராயும், பற்றற்ற விடுதலையில் திளைப்பவராயுமுள்ள மெய்யறிவு பெற்றவரைக் கண்டு தேவர்களும் பொறாமைப்படுகிறார்கள். (3)

180. அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல்;
அரிது அரிது மானிட வாழ்க்கை;
அரிது அரிது நல்லறம் கேட்டால்;
அரிது அரிது புத்தநிலை அடைதல். (4)

181. சகல பாவங்களையும் நீக்குதல், நற்கருமங்களைக் கடைப்பிடித்தல், உள்ளத்தைச் சுத்தம் செய்தல்-இதுதான் புத்தருடைய உபதேசம். (5)

182. 'நெடுங்காலம் துன்பத்தைத் தாங்கும் பொறு மையே முதன்மையான தவம்; நிகரற்ற உயர்ந்தபதவி நிருவாணமே' என்று புத்தர்கள் கூறுகின்றனர். பிறரைத் துன்புறுத்துவோன் முனிவன் அல்லன்; பிறரை இகழ்பவன் துறவி அல்லன் (6)

183. நிந்தனையை ஒழித்தல், பிறரை வருத்தாமலிருத்தல், அறத்திற்கு [20] அடங்கியிருத்தல், நிதான உணவு,ஏகாந்தமாயிருந்து உயர்ந்த சிந்தனைகளில் ஒருமைப் பட்டிருத்தல்-இதுவே புத்தருடைய உப தேசம். (7)

184. பொற்காசுகளை மழையாகப் பொழிந்தாலும்,ஆசைகள் அடங்காமற் பெருகும். ஆசைகளின்படி அனுபவித்தல் அற்ப இன்பம் என்றும், பின்விளைவு துக்கம் என்றும் அறிந்தவன் ஞானியாவான். (8)

185. பூரண ஞானம் பெற்ற புத்தருடைய சீடன் ஆசைகள் அனைத்தையும் அழிப்பதிலேயே இன்புறு வான்; வானுலக இன்பங்கள் கூட அவனுக்கு உவப்பானவை அல்ல. (9)

186. பயங்கொண்ட மனிதர்கள் மலைகளையும், வனங்களையும், புனிதமான மரங்களையும், புண்ணியத் தலங்களையும் புகலிடமாகக் கொள்கிறார்கள். (10)

187. இந்த அடைக்கலம் நல்ல பாதுகாப்பு அல்ல.இந்த அடைக்கலத்தால் மனிதன் வேதனைகளிலிருந்து விடுதலை பெறுவதில்லை. (11)

188. ஆனால் புத்தரையும், சங்கத்தையும், கருமத்தையும் சரணமடைதலில் நான்கு உன்னத உண்மை களைத் தெரிந்த ஞானத்தால் தேர்ந்து கொள்கிறான். (12)

189. துக்கம், துக்க காரணம், துக்க நிவாரணம், துக்கநிவாரண மார்க்கமாகிய அஷ்டாங்க மார்க்கம் [21] . (13)

190. இதுவே பாதுகாப்பான புகலிடம்; இதுவே தலைசிறந்த சரணம். இந்த அடைக்கலத்தை அடைந்த பிறகு, மனிதன் எல்லா வேதனைகளிலிருந்தும் விடுபடுகிறான். (14)

191. மக்களிலே திலகமான உத்தம புருடர் (புத்தர்)தோன்றுதல் துர்லபம். அவர் கண்ட இடங்களில் பிறப்பவர் அல்லர். அத்தகைய பரம ஞானி எங்கே பிறந்தாலும் அந்தக் குலம் விளக்கமடைகிறது. (15)

192. புத்தர்களின் தோற்றம் நன்மையளிக்கும்; அவர்களின் தரும உபதேசம் நன்மையளிக்கும்;பௌத்த சங்கத்தில் சேர்தல் நன்மையளிக்கும்;சங்கத்தில் சேர்ந்தவர்களின் தவமும் நன்மையளிக்கும். (16)

193. தீமைகளையெல்லாம் வென்று, துக்க வெள்ளத்தைத் தாண்டிக் கரையேறிய வணங்கத்தக்க புத்தரையோ, அவர் அடியார்களையோ வணங்குவோன். (17)

194. நிருவாண நிலைபெற்று, எதற்கும் அஞ்சாது(காற்றைப்போல்) சஞ்சரிக்கும் முத்தர்களை வணங்குவோன்-அடையும் புண்ணியத்தை எவரும் அளவிட முடியாது. (18)

195. பகை கொள்ளும் மனிதரிடையே பகையில்லாது நாம் இன்பமாக வாழ்கிறோம்; பகைக்கும் மனிதரிடையே நாம் பகையின்றித் திரிகிறோம். (1)

196. துயர்களால் வருந்துவோர் நடுவே துயரின்றி நாம் இன்பமாக வாழ்கிறோம்; துயரப்படுவோர் நடுவே நாம் துயரின்றித் திரிகிறோம். (2)

197. கவலையால் நலிந்தவரிடையே நாம் கவலையின்றி இன்பமாய் வாழ்கிறோம்; கவலைப்படுவோர் நடுவே நாம் கவலையின்றித் திரிகிறோம். (3)

198. எமது என்று எதுவுமில்லாத நாம் இன்பமாக வாழ்கிறோம்; தேசு மிகுந்த தேவர்களைப் போல் நாம்இன்பத்தைப் பருகிக்கொண்டே வாழ்வோம். (4)

199. வெற்றி வெறுப்பை வளர்க்கும்; தோல்வியுற்றார் துக்கத்தில் வாழ்பவர். வெற்றியும் தோல்வியும் விரும்பாதவன் சுகமும் சாந்தியும் பெறுகிறான். (5)

200. ஆசைகளுக்கு நிகரான அனல் வேறில்லை;துவேஷத்திற்கு நிகரான நோய் வேறில்லை;உடலோடு வாழ்வதற்கு நிகரான துயர் வேறில்லை;சாந்திக்கு மேலான சந்தோஷமும் வேறில்லை. (6)

201. பேராசையே பரம ரோகம்;
ஐம்புல ஆசைகள் பரமரோகம்;
இதை உண்மையாக உணர்ந்தவனுக்கு
நிருவாணமே பரம சுகம். (7)

202. ஆரோக்யகே பரம லாபம்;
திருப்தியே பரமதனம்;
விசுவாசமே பரம பந்து;
நிருவாணமே பரம சுகம். (8)

203. ஏகாந்தத்தின் இன்பத்தையும், அமைதியின் இன்பத்தையும் நுகர்ந்த பிறகு, ஒருவன் தர்மத்தின்

இன்பத்தைப் பருகும்போது, பயமும் பாவமும் விலகுகின்றன. (9)

204. நல்லாரைக் காண்பது நன்று; அவரோடு இணங்கியிருப்பது எப்போதும் இன்பம். மூடர்களைப் பாராமலேயிருப்பவன் எப்போதும் இன்பமாயிருப்பான். (10)

205. மூடனுடன் குலாவுவோன் நெடுங்காலம் துன்புறுவான். மூடரோடு குலாவுதல் பகைவருடன் பழகுவதைப் போல, எப்போதும் துக்கந்தான். அறிவாளரின் இணக்கம் சுற்றத்தாரோடு பழகுவதைப் போல் இன்பமே பயக்கும். (11)

206. ஆதலால் நட்சத்திர மண்டலத்தின் வழியைச் சந்திரன் பின்பற்றுவது போல, ஞானியாயும்,பேரறிவாளனாயும், கல்விமானாயும், பொறுமையுடையோனாயும், கடமை உணர்ந்தோனாயும்,மேலோனாயும் உள்ள மகானையே ஒருவன் பின்பற்ற வேண்டும். (12)

207. தியானத்தில் நிலைபெற்று நிற்காமல், உலக பாசங்களில் ஆழ்ந்து, தன் நன்மையையும் கைவிட்டு,இன்பத் தோட்டத்திலே இருப்பவன், தியானத்தில் ஆழ்ந்து முயற்சியோடு இருக்கும் யோகியைக் கண்டு பொறாமைப்படுவான். (1)

208. இன்பமயமானதையோ துன்பமானதையோ எவனும் பற்றிக் கொண்டிருக்கவேண்டாம். இன்பமானதைக் காணாமையும் துக்கம், துன்பமானதைக் காண்பதும் துக்கமே. (2)

209. ஆதலால், எதிலும் ஆசை வேண்டாம். ஆசைப்பட்ட பொருளை இழத்தல் துன்பம். ஆசையும்,வெறுப்பும் அற்றவனுக்கு விலங்குகள் இல்லை. (3)

210. ஆசைப்பட்டதிலிருந்து சோகம் தோன்றுகிறது;
ஆசைப்பட்டதிலிருந்து அச்சம் தோன்றுகிறது;
ஆசையற்றவனுக்குச் சோகமில்லை;-
பயம்தான் ஏது? (4)

211. பிரோமையிலிருந்து சோகம் தோன்றுகிறது;
பிரேமையிலிருந்து அச்சம் தோன்றுகிறது;
பிரேமையற்றவனுக்குச் சோகமில்லை;-
பயம்தான் ஏது? (5)

212. போகத்திலிருந்து சோகம் தோன்றுகிறது;
போகத்திலிருந்து அச்சம் தோன்றுகிறது;
போகத்தை விட்டவனுக்குச் சோகமில்லை;-
பயம்தான் ஏது? (6)

213. காமத்திலிருந்து சோகம் தோன்றுகிறது;
காமத்திலிருந்து அச்சம் தோன்றுகிறது;
காமத்தைக் கடந்தவனுக்குச் சோகமில்லை;-
பயம்தான் ஏது? (7)

214. பேராசையிலிருந்து சோகம் தோன்றுகிறது;
பேராசையிலிருந்து பயம் தோன்றுகிறது;
பேராசையற்றவனுக்குச் சோகமில்லை;

பயம்தான் ஏது? (8)

215. சீலங்கள் நிறைந்து மெய்யறிவு பெற்றவனை,அறத்தில் நிலைபெற்றவனை, வாய்மையாளனை,தன் கருமத்திலேயே நாட்டமுள்ளவனை உலகம் அன்போடு அரவணைத்துக் கொள்கிறது. (9)

216. வர்ணனைக்கு எட்டாத நிருவாணப் பேற்றில் நாட்டங்கொண்டவன், உள்ளத்தில் நிறைவுகொண்டவன், காமங்களைக் கடந்த மனமுள்ளவன்,-அவனே ஓடும் ஆற்றை எடுத்துச் செல்வோன் [22] என்று கூறப்படுவான். (10)

217. தூரதேசத்தில் நெடுங்காலம் சென்றிருந்தவன் சேமமாகத் திரும்பி வருகையில் சுற்றத்தாரும்,நண்பர்களும்,அன்பர்களும் அவனைக் களிப்போடு வரவேற்று உபசரிப்பார்கள். (11)

218. அவ்வாறே, புண்ணியம் செய்தவன் இவ்வுலகைவிட்டு மறு உலகம் செல்லும்போது, அவன் செய்தபுண்ணியங்கள் (முன்னதாக அங்கே சென்று),சுற்றத்தார் அன்பன் திரும்பி வருகையில் வரவேற்பது போல, அவனை அங்கே வரவேற்கின்றன. (12)

219. கோபத்தை விடு, செருக்கைக் கைவிடு, உலகப்பற்றுக்கள் அனைத்தையும் ஒழி. நாம-உருவங்களில் தொடர்பற்றவனுக்கு, எதையும் 'எனது' என்று கொள்ளாதவனுக்குத் துக்கங்கள் ஏற்படுவதில்லை. (1)

220. வழிதவறிச் செல்லும் இரதம் போலப் பொங்கிவரும் கோபத்தை அடக்கியாள்பவனையே நான்சரியான சாரதி என்று சொல்வேன்; மற்றையோர் கடிவாளக் கயிற்றைக் (கையில்) வைத்திருப்பவர்களே. (2)

221. வெகுளியை விநயத்தால் வெல்லவேண்டும்;
நீமையை நன்மையால் வெல்லவேண்டும்;
கருமியை ஈகையால் வெல்லவேண்டும்;
பொய்யனை மெய்யால் வெல்லவேண்டும். (3)

222. சத்தியமே பேசு, வெகுளிக்குப் பணியவேண்டாம்,யாசிப்பவர்க்கு இயன்றதைக் கொடு- இந்த மூன்றுவழிகளாலும் ஒருவன் தேவர்களுடைய சந்நிதியைநிச்சயம் அடையலாம். (4)

223. முனிவர்கள் அஹிம்சையோடு இருப்பவர்கள்,எப்போதும் உடலைக் கட்டுக்குள் வைத்திருப்பவர்கள். அவர்கள் நிலையான இடத்தை அடைவார்கள்; அடைந்த பின்பு அவர்கள் வருந்துவதில்லை. (5)

224. எப்போதும் விழிப்புடன் இருப்பவர்கள், அல்லும்பகலும் படித்தறிந்தவர்கள்; நிருவாண நாட்டத்திலேயிருப்பவர்கள்-அவர்களுடைய ஆஸவங்கள்அற்றொழியும். (6)

225. 'மௌனமாயிருப்பவனையும் நிந்திக்கிறார்கள்;அதிகம் பேசுவோனையும் நிந்திக்கிறார்கள்! மிதமாய்ப் பேசுவோனையும் நிந்திக்கிறார்கள்- 'ஓஅதலா!' [23] இது இன்று தோன்றியதன்று; இது ஒரு பழங்காலத்து மொழி. நிந்திக்கப்படாதார் எவருமே உலகில் இல்லை. (7)

226. முற்றிலும் நிந்திக்கப்பட்டவனும், முற்றிலும் புகழப்பட்டவனும் ஒருகாலும் இருந்ததில்லை, இருக்கப் போவதுமில்லை, இப்போதுமில்லை. (8)

227. விவரம் தெரிந்த பெரியோர் நாள்தோறும் கவனித்து வந்து எவனைக் குற்றமற்றவன், மேதாவி என்றும், தியானமும், சீலமும் நிரம்பியவன் என்றும் புகழ்கிறார்களோ, அவனை- (9)

228. சாம்பூநதப் [24] பொன்னாற் செய்த நாணயம் போன்ற அவனை நிந்திக்கக்கூடிய தகுதியுடையவர் யார்? தேவர்களே அவனைப் புகழ்கின்றனர்; பிரம்மாவாலும் அவன் புகழப்படுகிறான். (10)

229. உடம்பின் எரிச்சலை அடக்கிக் காக்கவும், உடலை அடக்கி வைக்கப் பழகவேண்டும். தீயஒழுக்கத்தை ஒழித்து, நல்ல ஒழுக்கத்தைப் பேணிவரவும். (11)

230. வாக்கினால் வரும் கோபத்தை அடக்கிக் காக்கவும், நா அடக்கத்தில் பழகவேண்டும். வாக்கினால் உண்டாகும் தீமையை ஒழித்து, நல்ல ஒழுக்கத்தைப் பேணி வரவும். (12)

231. மனத்தில் வரும் கோபத்தை அடக்கிக் காக்கவும்,மன அடக்கத்தில் பழக வேண்டும். மனத்தில்உண்டாகும் தீமையை ஒழித்து, நல்ல ஒழுக்கத்தைப் பேணி வரவும். (13)

232. உடலை அடக்கி, நாவை அடக்கி, மனத்தையும் அடக்கியுள்ள ஞானிகளே உண்மையான நல்லடக்கமுள்ளவர்கள். (14)

233. இப்போதும் நீ உலர்ந்த சருகுபோல் ஆகிவிட்டாய்;எமதூதர்கள் உன் அண்டையில் வந்திருக்கின்றனர். நீயும் பிரிவதற்கான வாயிலில் (வந்து) நிற்கிறாய், ஆனால், நீயே செல்லும் வழிக்கு வேண்டிய உணவு எதுவும் தயாரிக்கவில்லை. (1)

234. நீ (அடைக்கலம் புகுவதற்கான) ஒரு தீவை [25] தயாரித்துக்கொள்; விரைவாக முயற்சி செய்; அறிஞனாக இரு. உன் மலங்கள் துடைக்கப்பட்டுப் பாவங்கள் நீங்கியதும் நீ மேலோர் தங்கும் சுவர்க்கத்தை அடைவாய். (2)

235. உன் வாழ்க்கை முடியப் போகிறது. எமன் சந்நிதிக்கு நீ வந்துவிட்டாய். வழியிலே தங்கும் இடமும் வேறில்லை. நீயோ செல்லும் வழிக்கு வேண்டிய உணவு எதுவும் தயாரிக்கவில்லை. (3)

236. நீ (அடைக்கலம் புகுவதற்கான) ஒரு தீவைத் தயாரித்துக் கொள்; விரைவாக முயற்சி செய்; அறிஞனாக இரு. உன் மலங்கள் துடைக்கப்பட்டுப் பாவங்கள் நீங்கியதும், மறுபடி பிறப்பும் மூப்பும் உனக்கில்லை. (4)

237. தட்டார் வெள்ளியின் அசுத்தங்களைப் போக்குதல் போல, மேதாவியானவன் தன் மாசுகளைக் கொஞ்சங் கொஞ்சமாக, முறையாக, அவ்வப்போது நீக்கி வரட்டும். (5)

238. இரும்பிலிருந்து துரு தோன்றினும், அதை அது அரித்து விடுகிறது; அதுபோலவே (அற நெறி)பிறழ்ந்தவனை அவனுடைய கருமங்களே தீய கதியில் கொண்டு சேர்க்கின்றன. (6)

239. மந்திரத்தின் குறை பாராயணம் செய்யாமை;வீட்டின் குறை பழுது பாராமை;அழகின் குறை சிரத்தையின்மை;காவலாளியின் குறை கவனக்குறைவு. (7)

240. பெண்ணுக்கு இழுக்கு தீயநடை; கொடையாளிக்கு இழுக்கு கருமித்தனம்; தீச்செயல் யாவும் இம்மை யிலும், மறுமையிலும் இழுக்குடையவை. (8)

241. மலங்களில் எல்லாம் பெரியதோர் மலம் உண்டு-அறியாமையே முதன்மையான மலம். பிக்குக்களே! அந்த மலத்தையும் ஒழித்துவிட்டு மாசற்றவராக விளங்குவீர்! (9)

242. வெட்கமின்றிக் காகம் போல் துணிவுடையவனுக்கும், வம்பு வளர்ப்பவனுக்கும். புறங்கூறுவோனுக்கும், முரடனுக்கும், தூர்த்தனுக்கும் வாழ்க்கை எளிதாகவேயிருக்கிறது. (10)

243. ஆனால், நாணமுள்ளவனுக்கும், நன்னெறியில் நாட்டமுள்ளவனுக்கும், சுயநல மற்றவனுக்கும்,அகங்கார மற்றவனுக்கும், தூயோனுக்கும் வாழ்க்கை கஷ்டமாகவேயிருக்கிறது. (11)

244. உயிர்க்கொலை செய்வோனும், பொய் பேசுவோனும், பிறர் பொருள்களைப் பறிப்போனும், பிறர்மனை நண்ணுவோனும், (12)

245. வெறி கொடுக்கும் மது வகைகளைப் பருகுவோனும் இவ்வுலகிலேயே தம் வேர்களைத் தாமே கல்லியெறிகிறார்கள். (13)

246. ஏ மானிட, இதை அறிந்து கொள்! பாவத்தை எளிதில் அடக்க முடியாது. பேராசையும் தீயொழுக்கமும் உன்னைத் தீராத துக்கத்தில் அழுத்தாமலிருக்கட்டும். (14)

247. மக்கள் தங்கள் தகுதிக்கும், தரும சிந்தனைக்கும் தக்கபடி தானம் செய்கின்றனர். பிறருக்கு உண்ண உணவும், குடிக்கப் பாணமும் அளிப்பதைக் கண்டு பொறாமைப்படுவோர் பகலிலோ, இரவிலோ மன அமைதி பெறுவதில்லை. (15)

248. இந்தப் பொறாமை உணர்ச்சியை அழித்தவன்-வேரோடு அழித்தவனே-பகலும், இரவும் அமைதி

பெறுவான். (16)

249. காமவெறி போன்ற அனல் வேறில்லை; துவேஷத்தைப்போல் பற்றிக்கொள்ளும் முதலை வேறில்லை. (தெளிவின்றி) மயங்குதலைப் போன்ற வலைவேறில்லை; ஆசைகளைப்போல் (அடித்துக் கொண்டு போகும்) ஆறு வேறில்லை. (17)

250. பிறர் குறையைக் காண்பது எளிது; ஆனால் தன் குற்றத்தை அறிதலே அரிது; மற்றவர் குறைகளை ஒருவன் பதரைத் தூற்றுவது போல் தூற்றிவிடுகிறான். ஆனால், சூதாட்டத்தில் கரவட முள்ளவன் காய்களை மறைப்பது போல், தன் குறைகளை மட்டும் மறைத்துக் கொள்கிறான். (18)

251. பிறர் குறைகளிலேயே நோட்டமுள்ளவன், எப்போதும் புறங்கூறிக் கொண்டேயிருப்பவன், தன் குற்றங்களை வளர விடுகிறான்; அவன் தன் ஆஸவங்களை அழித்தல் கடினமாகிவிடும். (19)

252. ஆகாய வீதியிலே பாதை கிடையாது. அதுபோல் சமணனின் ஒழுக்கம் (அகத்திலன்றிப்) புறத்திலேயில்லை. மக்களோ உலகப் பற்றில் இன்புறுகின்றனர். உலகப்பற்று இல்லாதவர் ததாகரே [26] . (20)

253. ஆகாய வீதியிலே பாதை கிடையாது. அதுபோல் சமணனின் ஒழுக்கம் (அகத்திலன்றிப்) புறத்திலேயில்லை. பிரபஞ்சத்திலே நிலையானது எதுவுமில்லை; புத்தர்களுக்கோ நிலையற்றது எதுவுமில்லை. (21)

254. பலாத்காரத்தால் தன் காரியத்தை முடிப்பவன் நீதிமான் ஆகான். நன்மை தின்மை இரண்டையும் சீர் தூக்கி முடிவு செய்பவனே ஞானி. (1)

255. நீதியான அஹிம்சை நெறியிலே மற்றவர்களுக்கு வழிகாட்டுவோனே தருமத்தைக் காப்பவன்,மேதாவி, நீதிமான் எனப்படுவான். (2)

256. அதிகமாய்ப் பேசுவதால் மட்டும் ஒருவன் அறிஞனாகிவிட மாட்டான். வெறுப்பும் அச்சமும் இல்லாமலே உபசாந்தியோடு இருப்பவனே அறிஞன் என்று கருதப்படுவான். (3)

257. அதிகமாய்ப் பேசுவதால் மட்டும் ஒருவன் அறத்தை ஆதரிப்பவனாகிவிடமாட்டான் (அறவிதிகளைச்) சிறிதளவே அறிந்தவனாயினும்,ஒருவன் தன் வாழ்வில் (மன, மொழி, மெய் ஆகிய) உடலால் அறத்தை உணர்ந்து, தருமம் தவறாமல் நடந்தால், அவனே அறத்தை ஆதரிப்பவன். (4)

258. தலை நரைத்திப்பதால் மட்டும் ஒருவன் தேரனாகிவிடமாட்டான் [27] . அவன் வயது முதிர்ந்திருக்கலாம். ஆனால் பயனில்லாமல் வளர்ந்து வயோதிகமடைந்தவன் என்றே சொல்லப்படுவான். (5)

259. எவனிடம் சத்தியம், தருமம். அஹிம்சை, நிதானம் புலனடக்கம் முதலிய பண்புகள் நிலைத்திருக்கின்றனவோ, எவன் மலங்கள் நீங்கிப் புத்திமானாயிருக்கிறானோ, அவனே தேரன் எனப்படுவான். (6)

260. பொறாமையும், பேராசையும், தீயொழுக்கமும் உள்ளவன், பேச்சாலோ உடல் அழகாலோ மட்டும் நல்லவனாகிவிடமாட்டான். (7)

261. எவன் இவைகளையெல்லாம் அழித்துவிட்டானோ வேரொடு பறித்து எறிந்துவிட்டானோ, எவன் குற்றமற்ற

மேதாவியோ, அவனே உண்மையான அழகுடையவன் [28] . (8)

262. புலனடக்கம் இல்லாமல் பொய் சொல்லித் திரியும் ஒருவன், தலையை முண்டிதம் செய்து கொள்வதால் முனிவனாகிவிட மாட்டான். இச்சைகளுக்கும் பேராசைக்கும் அடிமைப்பட்டிருக்கும் ஒருவன் முனிவனாயிருப்பது எங்ஙனம்? (9)

263. பாவ உணர்ச்சிகள் சிறியவையாயினும், பெரியவையாயினும், அவைகளை எப்போதும் அடக்கியாள்பவனே முனிவன் எனப்படுவான். ஏனெனில், அவனே தீமை அனைத்தையும் அவித்தவன். (10)

264. மற்றவர்களிடம் பிச்சை ஏற்பதால் மட்டும் ஒருவன் பிக்கு ஆகிவிடமாட்டான். தருமம் அனைத்தையும் மேற்கொள்பவனே பிக்கு, ஒருபகுதியை மட்டும் மேற்கொள்பவன் பிக்கு ஆகான். (11)

265. எவன் நன்மைக்கும் தீமைக்கும் அப்பாற்பட்டு,பிரம்மசரியத்தைக் கைக்கொண்டு, கருத்தோடு உலகிலே சஞ்சரிக்கிறானோ, அவனே பிக்கு எனப்படுவான். (12)

266. அறிவில்லாது மூடனாயிருக்கும் ஒருவன் மௌனத்தினால் மட்டும் முனிவனாகிவிட மாட்டான்;ஆனால் தராசு பிடித்து நிறுத்துப் பார்த்து நன்மையை மட்டும் மேற்கொண்டு, (13)

267. தீமையை விலக்கும் ஒருவனே முனிவனாவான்;அந்தக் காரணத்தாலேயே அவன் முனிவன். இந்த உலகில் இரண்டு பக்கத்திலுள்ளதையும் எடை போட்டுப் பார்ப்பவனே முனிவன். (14)

268. உயிர்ப் பிராணிகளை ஹிம்சை செய்வதால். ஒருவன் உயர்ந்தவனாக மாட்டான்; உயிர்ப் பிராணிகளைத் துன்புறுத்தாததாலேயே அவன் உயர்ந்தவன் எனப்படுவான். (15)

269. கட்டுப்பாடான ஒழுக்கத்தாலும், திடசங்கற்பத்தாலும், அதிகக் கல்வியறிவாலும், சமாதி நிலையாலும், ஏகாந்தமாய் வசிப்பதாலும் மட்டுமே.- (16)

270. உலகத்தார் அடைவதற்கு அரிய நிருவாண இன்பத்தை நான் அடைந்துவிட முடியாது. ஓ பிக்கு! ஆஸவங்களை அழிக்கும் வரை திருப்தியுடன் அயர்ந்திருக்கலாகாது. (17)

271. மார்க்கங்களில் அஷ்டாங்க மார்க்கமே [29] சிறந்தது. வாய்மைகளில் நான்கு வாய்மைகளே [30] சிறந்தவை; சீலங்களில் வைராக்கியமே [31] சிறந்தது; மக்களில் ஞானக்கண் [32] உடையவனே சிறந்தவன். (1)

272. இதுதான் மார்க்கம், அறிவைப் புனிதமாக்க வேறு வழியில்லை. இதையே பின்பற்றுக; மாரனைவெல்ல இதுவே ஏற்றது. (2)

273. இந்த மார்க்கத்தில் சென்றால், உன் துக்கங்கள் தொலையும். சதையில் தைத்துள்ள முட்களை(துன்பங்களை) நீக்கும் வழியை அறிந்ததும், நான் இந்த மார்க்கத்தை உபதேசிக்க நேர்ந்தது. (3)

274. நீயே தான் முயற்சி செய்ய வேண்டும். ததாகதர் உபதேசம் மட்டுமே செய்வர். இந்த மார்க்கத்தில் இறங்கி, தியானத்தில் ஆழ்ந்தவர்களுக்கு மாரனுடைய பந்தங்கள் [33] விலகும் (4)

275.
'படைக்கப் பெற்ற யாவும் அநித்யம்-நிலையற்றவை'. இதை அறிவால் உணர்ந்தவன் துக்கத்தில் அழுங்குவதில்லை; இதுவே விசுத்தி மார்க்கம் [34] . (5)

276. 'படைக்கப் பெற்ற யாவும் துக்கமானவை' இதை அறிவால் உணர்ந்தவன் துக்கத்தில் அழுங்குவதில்லை; இதுவே விசுத்தி மார்க்கம். (6)

277. படைக்கப் பெற்ற யாவும் அநாத்மம் [35] - இதை அறிவால் உணர்ந்தவன் துக்கத்தில் அழுங்குவதில்லை, இதுவே விசுத்தி மார்க்கம். (7)

278. எவன் உரிய வேளையில் விழித்து எழாமலுள்ளானோ, எவன் பலமுள்ள வாலிபனாயிருந்தும்,சோம்பரில் ஆழ்ந்து கருத்திலும் சிந்தனையிலும் உறுதியற்றுள்ளானோ, அந்த மந்த புத்தியுள்ள சோம்பேறி ஞான மார்க்கத்தை அடையமுடியாது. (8)

279. ஒருவன் தன் நாவைக் காத்து, மனத்தை அடக்கி உடலால் தீமை எதையும் செய்யாது இருப்பானாக.செயல்புரிவதற்கு ஏற்பட்ட இந்த மூன்று வழிகளையும் பரிசுத்தமாக வைத்திருப்பவன் பெரியோர் அருளிய நன்னெறியை அடைவான். (9)

280. தியானத்திலிருந்து ஞானம் உதயமாகிறது; தியான மில்லாவிடில் ஞானம் குறைகிறது; ஆக்கமும்,கேடும் வரக்கூடிய இந்த இரு வழிகளையும் அறிந்து, அறிவு பெருகும் வழியை மனிதன் மேற்கொள்வானாக. (10)

281. ஓ பிக்குகளே! ஒரு மரத்தை மட்டும் வெட்டினால் போதாது, ஆசைக் காட்டையே அரிந்து தள்ளுங்கள்! ஆசைக் காட்டிலிருந்தே அபாயம் வருகிறது. காட்டையும், புதர்களையும் வெட்டி வீழ்த்திய பிறகு நீங்கள் விடுதலை பெறுவீர்கள். (11)

282. ஆடவன் பெண்களிடம் கொள்ளும் காம ஆசை எதுவரை அழிக்கப்படாமல் அணுவளவேனும் இருக்கிறதோ, அதுவரை, பால்குடி மறவாத பசுங்கன்று தன் தாயிடம் ஒட்டிக் கொள்வது போல், அவன் மனம் (வாழ்வைப்) பற்றிக் கொண்டேயிருக்கும். (12)

283. சரத்காலத்தில் தோன்றும் குமுத புஷ்பத்தைக் கையால் பறித்தெடுப்பது போல், ஆன்மநேயத்தை [36] அறுத்தெறிக. புத்தர் போதித்த நிருவாண முக்திக்குரிய சாந்தி மார்க்கத்தைப் போற்றி நடக்கவும். (13)

284. மூடனாயிருப்பவன், 'கார் காலத்தில் இங்கே வசிப்பேன்!' என்றும், 'குளிர் காலத்திலும், கோடை காலத்திலுமம அங்கே வசிப்பேன்!' என்றும் கருதுகிறான்; (இடையிலே வரக்கூடிய மரணம் என்ற) இடையூற்றைப் பற்றி அவன் எண்ணுவதில்லை. (14)

285. (மக்கள்) உறங்கிக் கொண்டிருக்கையில் பெருவெள்ளம் வந்து கிராமத்தையே அடித்துக்கொண்டு போய்விடுகிறது; அதுபோல், தன்மக்கள் பசுக்கள் முதலிய

செல்வங்களில் மகிழ்ந்து மயக்கத்திலுள்ள மனிதனை எமன் வந்து அடித்துக் கொண்டு போகிறான். (15)

286. எமனால் பிடிக்கப்பட்ட ஒருவனை அவன் பெற்றமக்கள் காக்க முடியாது; தந்தையும் தமர்களும் காக்க முடியாது; உற்றாரை நம்பியும் பயனில்லை. (16)

287. இதன் உண்மையை உணர்ந்து, நற்குணமுள்ள ஞானி நிருவாண முக்திக்குரிய வழியிலேயுள்ள தடைகளை உடனே நீக்கிக் கொள்ளட்டும். (17)

288. அற்ப சுகத்தை இழப்பதால் பெரிய இன்பத்தைக் காணலாம் எனின், ஞானி அற்ப சுகத்தைக் கைவிட்டு பெரிய இன்பத்தை நாடுவானாக. (1)

289. பிறரைத் துன்புறுத்தித் தான் இன்பமடைய விரும்புவோன், துவேஷத் தளைகளில் சிக்குண்டு, துவேஷத்திலிருந்து விடுபடுவதில்லை. (2)

290. செய்யத் தக்கதைக் கைவிட்டு, தகாததைச் செய்தால் கட்டுக்கடங்காத அத்தகைய கருத்தற்றவர்களின் ஆஸவங்கள் வளர்ந்துகொண்டேயிருக்கும். (3)

291. எவர்கள் உடலின் இயல்பை உணர்ந்து மனத்தில் எப்போதும் கவனமாயிருந்து, செய்யத் தகாதவைகளை விலக்கி, செய்யத் தக்கவைகளையே செய்து வருகிறார்களோ,அத்தகைய கருத்துடைய அறிவாளரின் ஆஸவங்கள் அழிந்தொழிகின்றன. (4)

292. உண்மையான பிராமணன் ஒருவன், தன் தாயையும், தந்தையையும், க்ஷத்திரிய மன்னர் இருவரையும் கொன்றிருந்த போதிலும், குடிகளோடு ஓர் இராஜ்யத்தையே அழித்திருந்த போதிலும், அவன் பாவமற்றவனாவான் [37] . (5)

293. உண்மையான பிராமணன் ஒருவன் தன் தாயையும், தந்தையையும், குருமார்களாகிய க்ஷத்திரியமன்னர் இருவரையும், ஐந்தாவதாக ஒரு வேதியனையும் கொன்றிருந்த போதிலும், அவன் பாவமற்றவனாவான். (6)

294. கௌதமருடைய [38] சீடர்கள் எப்போதும் கருத்துடன் விழிப்பாயிருக்கிறார்கள்; இரவும் பகலும் எப்போதும் அவர்களுடைய சிந்தனையெல்லாம் புத்தரைப் பற்றியவையே. (7)

295. கௌதமருடைய சீடர்கள் எப்போதும் கருத்துடன் விழிப்பாயிருக்கிறார்கள்; இரவும், பகலும் எப்போதும் அவர்களுடைய சிந்தனையெல்லாம் பௌத்த தருமத்தைப் பற்றியவையே. (8)

296.
கௌதமருடைய சீடர்கள் எப்போதும் கருத்துடன் விழிப்பாயிருக்கிறார்கள்; இரவும், பகலும் எப்போதும் அவர்களுடைய சிந்தனையெல்லாம் பௌத்த சங்கத்தைப் பற்றியவையே. (9)

297. கௌதமருடைய சீடர்கள் எப்போதும் கருத்துடன் விழிப்பாயிருக்கிறார்கள், இரவும், பகலும் அவர்களுடைய சிந்தனையெல்லாம் உடலின் தன்மையைப் பற்றியவையே. (10)

298. கௌதமரின் சீடர்கள் எப்போதும் கருத்துடன் விழிப்பாயிருக்கிறார்கள்; இரவும், பகலும் எப்போதும் அவர்கள் மனம் அஹிம்சையைப் பற்றியே சிந்தித்திருக்கும். (11)

299. கௌதமரின் சீடர்கள் எப்போதும் கருத்துடன் விழிப்பாயிருக்கிறார்கள்; இரவும், பகலும் எப்போதும் அவர்கள் மனம் தியானத்திலேயே திளைத்திருக்கும். (12)

300. உலக வாழ்வை விட்டுத் துறவியாதல் கஷ்டம்;அவ்வாழ்வை அநுபவிப்பதும் கஷ்டம்.இல்லறந் தானாக வீட்டிலிருந்து வாழ்வதும் கஷ்டம்.ஆதலால் எவனும் நாடோடியாகத் திரிய வேண்டாம்; எவனும் துன்பத்தில் விழவும் வேண்டாம். (13)

301. சிரத்தையும், குணமும், புகழும், செல்வமும் பொருந்தியவன் எந்தெந்த இடத்தில் தங்கியிருந்தாலும் அங்கங்கே போற்றப்படுகிறான். (14)

302. நல்லோர், இமய மலையைப் போல், நெடுந்தூரத்திலிருந்தே பிரகாசிக்கின்றனர்; ஆனால் தீயோர் இரவின் இருளூடு எய்த அம்புகளைப் போல் கண்ணுக்கே புலனாவதில்லை. (15)

303. ஒருவன் தனியே அமர்ந்து, தனியே உறங்கி,தனியே வாழ்ந்து, மடிமையை ஒழித்துத் தானே தன்னை அடக்கி

வைத்துக்கொண்டால், ஆசைகளற்ற நிலையில் அவன் இன்பம் பெறுவான். (16)

304. உண்மையாயில்லாததைப் புனைந்துரைப்பவன் நரகத்தை அடைகிறான்; ஒன்றைச் செய்துவிட்டு,'அதை நான் செய்யவில்லை' என்போனும் அப்படியே அடைகிறான். மரணத்திற்குப் பின் மறுமையில் இருவரும் நிகராகி, நரகம் என்ற ஒரே இடத்தை அடைகின்றனர். (1)

305. காஷாய ஆடை தரித்தவர்களிலும் தம்மை அடக்கிக் கொள்ளாமல் பாவ கருமங்களைச் செய்வோர் பலர் இருக்கின்றனர்; இத்தகையோர் தங்கள் பாவச் செயல்களால் நரகத்தை அடைகின்றனர். (2)

306. புலனடக்கமில்லாத தீயொழுக்கமுள்ளவன் நாட்டு மக்கள் (அளிக்கும்) உணவை உண்பதைக் காட்டினும், அனல் வடிவமான பழுக்கக் காய்ந்த இரும்பு உருண்டையை முழுங்குவதே நலமாம். (3)

307. மற்றொருவனுடைய தாரத்தை இச்சிக்கும் பேதை நான்கு விதமான பயன்களை அடைவான்; பாவம், அமைதியான உறக்கமின்மை, மூன்றாவதாகப் பழி, நான்காவதாக நரகம். (4)

308. பாபம் ஏற்படுகிறது; அத்துடன் பாவிகளுக்குரிய தீய கதியும் அடைய வேண்டும்; அஞ்சி நடுங்கும் ஒருத்தியுடன் ஒருவன் அஞ்சிக்கொண்டே துய்க் கும் இன்பம் மிகவும் அற்பமானது; அரசனும் கடுமையான தண்டனை விதிக்கிறான். ஆதலால் எந்த மனிதனும் பிறன் மனைவியை விரும்பலாகாது. (5)

309. தர்ப்பைப் புல்லைத் தவறாக இழுத்தால் அது கையை அறுத்து விடுகிறது; அதுபோல் தீய வழியில் பயிலும் துறவறமும் ஒருவனை நரகில் சேர்க்கிறது. (6)

310. சிரத்தையின்றிச் செய்யும் காரியமும், ஒழுங்காகக் கடைப்பிடியாத விரதமும், மனமாரப் பேணாத பிரம்மசரியமும் பெரும் பயனை அளிக்கமாட்டா. (7)

311. ஒருவன் யாதேனும் ஒன்றைச் செய்ய வேண்டுமாயின் அதை ஊக்கத்தோடும், உறுதியோடும்

செய்வானாக; கவனக்குறைவான துறவி தானே தன் மீது அதிகப் புழுதியையே பூசிக்கொள்கிறான். (8)

312. தீய வினையைச் செய்யாது விடுதலே நலம்.ஏனெனில் தீவினை பின்னால் துன்பத்தை அளிக்கின்றது. நல்வினை புரிவதே நலமாகும்; அதனால் பின்னால் வருந்த நேராது. (9)

313. (இராஜ்யத்தின்) எல்லைப் புறத்தில் இருக்கும் நகரத்தை உள்ளும், வெளியும் அரண் செய்து காப்பதுபோல், ஒருவன் தன்னைக் காத்துக் கொள்க. கண நேரத்தையும் வீணாக்க வேண்டாம்; ஒவ்வொரு நிமிஷத்தையும் நல்வழியிலே பயன் படுத்தாமல் நிமிஷங்களை வீணாகக் கழித்தவர்கள் நிரயத்தில் விழும்போது வருந்துவர். (10)

314. நாண வேண்டாத கருமங்களுக்கு நாணியும், நாண வேண்டியவைகளுக்கு நாணாமலும் இருக்கும் மனிதர் தவறான கொள்கைகளைப் பின்பற்றித் தீயகதியை அடைகின்றனர். (11)

315. அஞ்சவேண்டாத கருமங்களுக்கு அஞ்சியும்,அஞ்ச வேண்டியவைகளுக்கு அஞ்சாமலும் இருக்கும் மனிதர் தவறான கொள்கைகளைப் பின்பற்றித் தீய கதியை அடைகின்றனர். (12)

316. பாவமில்லாத இடத்தில் பாவத்தையும், பாவமுள்ள இடத்தில் பாவமின்மையையும் காண்கிறவர்கள் தவறான கொள்கைகளைப் பின்பற்றித் தீயகதியை அடைகின்றனர். (13)

317. பாவத்தைப் பாவமாகவும், பாவமின்மையைப் பாவமற்றதாகவும் காண்பவர்கள், சத்தியமான கொள்கைகளைப் பின்பற்றி நற்கதியை அடைகின்றனர். (14)

[சூத்திரங்கள் பலவற்றில் யானையை உபமானமாகக் கூறியிருத்தல் பற்றி இயலுக்கே 'யானை' என்று பெயர் வந்துள்ளது.]

318. யுத்தத்தில் யானை வில்லிலிருந்து தெறித்து வரும் அம்புகளைத் தாங்குவது போல, நான் பிறர் உரைக்கும் நிந்தை மொழிகளைத் தாங்கிக் கொள் வேன்; ஏனெனில் பெரும்பாலான ஜனங்கள் பண்பற்றவர்களாகவே இருக்கின்றனர். (1)

319. பழகிய யானையையே போருக்கு அழைத்துச் செல்வர்; பழகிய யானை மீதே அரசர் அமர்ந்து செல்வர். மக்களிலும் நல்வழியில் பழகியவனே,நிந்தை மொழிகளைப் பொறுத்துக் கொள்வோனே சிறந்தவன். (2)

320. கோவேறு கழுதைகளும், சிந்து நாட்டு உயர்ந்த சாதிக் குதிரைகளும், பெரிய போர் யானைகளும் பழக்கிய பின்னால் சிறந்தவைகளாம். ஆனால் தன்னைத் தானே அடக்கியாள்பவன் இவை அனைத்திலும் சிறந்தவன். (3)

321. ஏனெனில் இந்தப் பிராணிகள் உதவியால் எந்த மனிதனும் எவரும் சென்றறியாத நிருவாண நாட்டுக்குச் செல்ல முடியாது; மனப் பயிற்சியுள்ள மனிதன் புலனடக்கமுள்ள தன் இயல்பையே வாகனமாய்க் கொண்டு அந்த நாட்டை அடைகிறான். (4)

322. தனபாலகன் என்ற பெயருள்ள யானையானது மத நீர் பொழியும் காலத்தில் அடக்கமுடியாத தாகிறது.கட்டிவைத்தால், அது ஒரு கவளம் (உணவு) கூட உண்ணாது.அதன் நினைவெல்லாம் யானைகள் வசிக்கும் வனத்திலேயே இருக்கும். (5)

323. மலத்தைத் தின்று வரும் பெரும் பன்றியைப்போல்,ஒருவன் உடல் கொழுத்துப் பெருந்தீனியில்பற்றுள்ளவனாகி, நீங்காத சோம்பலிலும், நித்திரை யிலும் ஆழ்ந்து, படுக்கையிலே புரண்டுகொண்டிருந்தால், அந்த அறிவிலி திரும்பத் திரும்பப் பிறவியெடுக்க நேருகிறது. (6)

324. முற்காலத்தில் எனது மனம் தன் விருப்பம் போல்சுற்றித் திரிந்து கொண்டிருந்தது.யானை மதம்கொள்ளும்போது பாகன் அங்குசத்தால் அதனை அடக்குவதுபோல, இப்போது என் மனத்தைநான் அடக்கியாள்வேன். (7)

325. கருத்தில்லாமல் இருக்கவேண்டாம்; மனத்தில் சிந்தனைகளை அடக்கிக் காக்கவும், சேற்றில் விழுந்த யானையைக் கரையேற்றுவது போலத்தீய வழியிலிருந்து உன்னை மீட்டுக் கொள்க. (8)

326. அறிவாளியாயும், உன்னோடு ஒத்துப் பழகக்கூடியவனாயும், அடக்கத்தோடு நல்லொழுக்க முடையவனாயும் ஒரு தோழன் கிடைப்பானாகில்,எல்லா இடையூறுகளையும் கடந்து, அவனுடன்கருத்தோடும், மகிழ்ச்சியோடும் நட்புக் கொள்வாயாக. (9)

327. அறிவாளியாயும், உன்னோடு ஒத்துப் பழகக்கூடியவனாயும், அடக்கத்தோடு நல்லொழுக்க முடையவனாயும் ஒரு தோழன் கிடைக்கவில்லை யானால், தன்னை வென்ற பகையரசனிடம்நாட்டைவிட்டு வெளியேறும் மன்னனைப் போலவும், யானைகளின் வனத்திலே யானை (சுயேச்சை யாய்த்) திரிவது போலவும், நீ தனியாகவேவாழ்வாயாக. (10)

328. மூடனுடைய நட்பைப் பார்க்கிலும் ஒருவன்தனியே வசிப்பது நலம். ஆசைகளைக் குறைத்துக் கொண்டு, யானைகளின் காட்டில் யானை(சுயேச்சையாகத்) திரிவது போல், அவன் தனியேசெல்வானாக; பாவகருமம் எதையும் செய்யாதிருப்பானாக. (11)

329. அவசியம் ஏற்படும்போது நண்பர்கள் வாய்ப்பது இனிமையாம்; ஒரு தலையாக இல்லாத திருப்தி இனிமையாம்; மரணகாலத்தில் (முன் செய்த)புண்ணியம் இனிமையாம்; எல்லாத் துக்கங்களையும் விட்டொழித்தல் இனிமையாம். (12)

330. இந்த உலகில் தாயைப் போற்றுதல் இனிது;தந்தையைப் போற்றுதல் இனிது; துறவியைப் போற்றுதல் இனிது; இனிதே மெய்ஞ்ஞானியைப்போற்றுதல். (13)

331. வயோதிகம்வரை நல்லொழுக்கம் நிலைத்திருத்தல்இனிது; (அறத்தில்)உறுதியான நம்பிக்கைஇனிது; ஞானத்தை அடைதல் இனிது; இனிதேபாவங்களை விலக்கல். (14)

332. சிந்தனையில்லாமல் திரியும் மனிதனுக்கு அவா மாலுவக் கொடிபோல் வளர்கிறது. வனத்திலேவானரம் பழத்தை நாடி அங்குமிங்கும் தாவித் திரிவது போல், அவன் எடுக்கும் பிறவிகளுக்கு அளவில்லை. (1)

333. (இவ்வுலகில்) எவனை இந்தக் கொடிய விஷம் போன்ற அவா பற்றிக்கொள்கிறதோ, அவனுக்குச் சோகம் காட்டுப் புல்லைப் [39] போல் வளர்ந்துபெருகிக் கொண்டேயிருக்கும். (2)

334. இவ்வுலகில் எவன் அடக்க அரிதான இந்தக்கொடிய அவாவை அடக்கி வெல்கிறானோ,அவனுடைய சோகங்கள், தாமரையிலையில் நீர்த்துளிகள் ஒட்டாமல் சிதறுவதுபோல், உதிர்ந்து ஒழிகின்றன. (3)

335. இங்கே கூடியுள்ள உங்கள் அனைவருக்கும் நன்மையான இந்த உபதேசத்தைச் செய்கிறேன். வீரணப்புல்லின் கிழங்குக்காக [40] அப்புல்லையே தோண்டி எடுப்பதுபோல, அவாவின் வேரைத் [41] தோண்டி எடுங்கள்; ஆற்று வெள்ளம் (கரையி லுள்ள) கோரைப்புல்லை அழிப்பதுபோல், மாரன் உங்களைத் திரும்பத் திரும்ப அழிக்காதபடி காத்துக் கொள்ளுங்கள். (4)

336. மரத்தை வெட்டினாலும், அதன் வேர் சேதமில்லாமல் உறுதியாயிருந்தால், மீண்டும் தளிர்த்து விடுகிறது; அதுபோல, அவாவின் காரணங்களானவேர்கள் அழிக்கப்படாவிட்டால், துக்கம் திரும்பத்திரும்ப வளர்ந்து கொண்டேயிருக்கும். (5)

337. எவனுடைய முப்பத்தாறு நதிகளும் [42] புலன்களின் இன்பத்தையே நாடி வெள்ளமிட்டுச் செல்கின்றனவோ, எவனுடைய சிந்தனைகள் காம வெறியி லேயே நிலைத்திருக்கின்றனவோ, அத்தகையதவறான காட்சியுள்ளவனை வெள்ளம் அடித்துக்கொண்டு போகிறது. (6)

338. நதிகள் நாற்புறமும் ஓடிப்பாய்கின்றன; அவாஎன்னும் கொடி முளைத்தெழுந்து நிலைத்துப்படர்கிறது. இக்கொடி

முளை விடுவதைக்கண்டதும் மெய்யறிவின் துணையால் இதைவேரோடு பிடுங்கி எறியவும். (7)

339. உயிர்களுக்கு இன்பங்களும் பலவித ஆசைத் தொடர்புகளும் ஏற்படுகின்றன.அவை இந்த இன்பங்களில் பற்றுக் கொண்டு இவற்றிலேயே தோட்டமாயிருக்கின்றன.இத்தகைய மனிதர்களே(மீண்டும் மீண்டும்) பிறப்பையும், மூப்பையும் அடைகிறார்கள். (8)

340. அவாவினால் உந்தப்பட்ட மனிதர்கள் வேட்டையில் விரட்டப்பட்ட முயலைப்போல், ஓடித் திரிகிறார்கள். அவாவின் விலங்குகளில் கட்டுண்டு அவர்கள் நெடுங்காலம் துயரத்தை அனுபவிக் கிறார்கள்; இப்படித் திரும்பத் திரும்ப நேருகின்றது. (9)

341. அவாவினால் உந்தப்பட்ட மனிதர்கள், வேட்டையில் விரட்டப்பட்ட முயலைப்போல், ஓடித் திரிகிறார்கள். ஆதலால் மோக பந்தங்களிலிருந்து விடுதலை பெற விரும்பும் பிக்கு அவாவை ஒழிப்பானாக. (10)

342. (அவாவாகிய) வனத்திலிருந்து [43] , 'மீட்சி பெற்றுவனமற்ற நிருவாணப் பிரதேசத்தை அடைந்தவன் (அவாவாகிய) வனத்திலிருந்து தப்பியபின் அதே வனத்திற்குத் திரும்பி ஓடுகிறான்-விடுதலைபெற்றுத் திரும்பவும் பந்தனத்துள் மாட்டிக் கொள்ளும் இந்த முத்தனைப் பாருங்கள். (11)

343. இரும்பு விலங்கையும், மரக்குட்டையும், கயிற்றுக் கட்டையும் அறிஞர் பலமான தளை என்று கூறுவதில்லை; ஆனால், பொன்னாலும், இரத்தி னங்களாலும் செய்யப் பெற்ற நகைகளிலும், மனைவியிடத்தும், மக்களிடத்தும் வைக்கும் பாசமே மிகவும் பலமுள்ளது என்பர். (12)

344. இந்தப் பாசம் (கழற்றவோ, அறுக்கவோ) எளிதான முறையில் தளர்ச்சியாகவும், உறுதியற்றும் இருந்தாலும் இதை அவிழ்ப்பதோ அறுப்பதோகஷ்டம். இதுவே பலமான

தளை என்று அறிஞர்கூறுவர். ஆசைகளற்றுப் புலன்களின் இன்பங்களைக் கைவிட்டு உலகைத் துறப்பவர்கள் இதை யும் அறுத்து விடுகிறார்கள். (13)

345. சிலந்தி தானே அமைத்த வலைக்குள் சுற்றுவதுபோல, ஆசைகளில் அழுந்திய மக்கள் வெள்ளத்தின் போக்கில் மிதந்து செல்கின்றனர். அறிவுபெற்றவர்கள்,(அவா என்னும்) இந்தத் தளையைஅறுத்துக் கொண்டதும் உலகைத் துறந்து,கவலைகளில்லாமல், துக்கங்களை யெல்லாம்விட்டுக் கடந்து போகின்றனர். (14)

346. முன்னால் இருப்பதையும், பின்னால் இருப்பதையும், நடுவில் இருப்பதையும் கடந்து பிறவியின்மறுகரையை அடைவாயாக. மனம் முழுவதும் விடுதலையடைந்து விட்டால், நீ மறுபடிபிறப்பும் மூப்பும் பெறமாட்டாய். (15)

347. கலங்கிய சிந்தனைகளும், உணர்ச்சி வெறிகளும்,இன்பத்தில் தேட்டமும் உள்ள மனிதனுக்கு அவா வளர்ந்து கொண்டேயிருக்கும்; அவன் தன்கட்டைப் பலப்படுத்திக் கொள்கிறான். (16)

348. சிந்தனைகளைச் சாந்தப் படுத்துவதில் நாட்ட முள்ளவன், எப்பொழுதும் விழிப்புள்ளவன்,(உலகில்) இன்பமில்லை என்பதில் கருத்தைச்செலுத்துபவன், மாரனின் மரணத்தளையிலிருந்துவிடுபடுவான்-அதை முறித்தெறிவான். (17)

349. எவன் தியானத்தின் முடிவான உபசாந்தியை அடைந்துள்ளானோ, எவன் பயத்தையும், பாசத் தையும், பாவத்தையும், ஒழித்துவிட்டானோ, அவன் பிறவியாகிய முட்களைக் களைந்தெறிந் தவன், (பல ஸ்கந்தகங்களால் அமைந்த) இந்தச்சடலமே அவன் (எடுக்க நேர்ந்த) கடைசி உடம்பாம். (18)

350. எவன் அவாவை அழித்து, எதையும் தேடி வைத்துக் கொள்ளாமல் இருக்கிறானோ, எவன்சொற்களையும், அவற்றின் பொருள்களையும் உணரும் சக்தியுள்ளானோ, எவன் எழுத்துக்களின் சேர்க்கையை (முன்னும் பின்னும்

இருக்கவேண்டிய (முறையை)த் தெரிந்துள்ளானோ,அவனே மகா ஞானி, அவனே மகான்.இந்தச்சடலமே அவன் (எடுக்க நேர்ந்த) கடைசி உடம்பாம். (19)

351. 'நான் யாவற்றையும் பென்றவன், நான் யாவற்றையும் அறிந்தவன், வாழ்வின் நிலைகள்யாவற்றினும் நான் ஒட்டுப் பற்றில்லாதவன். எல்லாவற்றையும் நான் துறந்தாயிற்று, அவாவை அழித்ததால் நான் முக்தி அடைந்தவன்.எல்லாவற்றையும் நானே கற்றுக் கொண்டபின், எவரை என் குருவென்று காட்டுவேன்?' [44] . (20)

352. சகல தானங்களையும் தரும தானமே [45] வெல்கிறது; சகல இனிமைகளையும் தரும இனிமை வெல்கிறது; சகல இன்பங்களையும் தரும அநுபவம் வெல்கிறது; சகல துன்பங்களையும் அவாவின்மை வெல்கிறது. (21)

353. போக வாழ்க்கை மூடனை அழித்துவிடுகின்றது;ஆனால் எதிர்க்கரையை நாடுவோரை அழிப்ப தில்லை, மூடன் போக ஆசையால் பிறரால் அழிக் கப்படுவதுபோல் [46] தானே தன்னை அழித்துக்கொள்கிறான். (22)

354. வயல்களுக்குத் தீமை களைகள், மனிதவர்க்கத் திற்குத் தீமை ஆசை; ஆதலால் ஆசையற்றவர் களுக்குச் செய்த உதவி பெரும்பயனை அளிக்கும். (23)

355. வயல்களுக்குத் தீமை களைகள், மனிதவர்க்கத் திற்குத் தீமை துவேஷம்; ஆதலால் துவேஷ மற்றவர்களுக்குச் செய்த உதவி பெரும் பயனை அளிக்கும். (24)

356. வயல்களுக்குத் தீமை களைகள், மனிதவர்க்கத் திற்குத் தீமை மயக்கம்; ஆதலால் மயக்கம் நீங்கியவர்களுக்குச் செய்த உதவி பெரும் பயனை அளிக்கும். (25)

357. வயல்களுக்குத் தீமை களைகள், மனித வர்க்கத்திற்குத் தீமை இச்சை; ஆதலால் இச்சையற்றவர்களுக்குச் செய்த உதவி பெரும் பயனை அளிக்கும். (26)

358. கண்ணைக் காத்தல் நலம்; காதைக் காத்தல் நலம்; நாசியைக் காத்தல் நலம்; நாவைக் காத்தல் நலம். (1)

359. உடலைக் காத்தல் நலம். வாக்கைக் காத்தல் நலம்; மனத்தைக் காத்தல் நலம்; எல்லாவற்றையும் காத்துக் கொள்ளல் நலம். எல்லாவற்றையும் காத்துக்கொள்ளும் பிக்கு சகல துக்கங்களிலிருந்தும் விடுபடுகிறான். (2)

360. எவன் கைகளை அடக்கிப் பாதங்களை அடக்கி, வாக்கை அடக்கி தன்னை நன்கு காத்துக்கொண்டவனோ, எவன் தியான இன்பத்திலுள்ளவனோ, எவன் மன அமைதி பெற்றுத் திருப்தியுடன் ஏகாந்தமாக இருக்கிறானோ, அவனையேபிக்கு என்பர். (3)

361. நாவடக்க முள்ளவனாய், உயர்ந்த கருத்துக்களை உபதேசிப்பவனாய்,கர்வமற்ற அமைதியுள்ள வனாய்த், தருமத்தையும் அதன் பொருளையும்விளக்கிக் கூறுதல் இனிமையேயாம். (4)

362. தரும உபதேசத்தை மகிழ்ச்சியுடன் பின்பற்றி,தருமத்திலேயே திளைத்து, தருமத்தையேஎப்போதும் சிந்தனை செய்து, தரும வழியிலேயேநடக்கும் பிக்கு உண்மையான தருமத்திலிருந்து பிறழ்வதில்லை. (5)

363. அவன் தனக்குக் கிடைத்ததை அலட்சியமாகஎண்ணாமலும், மற்றவர்களிடம் பொறாமைகொள்ளாமலும் இருக்க வேண்டும். பிறரைக்கண்டு பொறாமைப்படும் பிக்கு மனச் சாந்திபெறுவதில்லை. (6)

364. பிக்கு ஒருவன், தனக்குக் கிடைத்தது அற்பமேயா யினும், அதை இகழாமல், தூயவாழ்வுடன்சோம்பலின்றி உழைத்து வந்தால், அவனைத் தேவர்களும் புகழ்கின்றனர். (7)

365. எவ்விதமான நாமரூபத்தையும், ஒருபோதும் தனது என்று கருதாமல், ஒன்றும் இல்லாதநிலைக்கு

வருந்தாமல் இருப்பவனே பிக்கு எனப்படுவான். (8)

366 (எல்லோடனும்) அன்புடன் பழகி, புத்தருடைய தருமத்தில் இன்புற்று வாழும் பிக்கு, வாழ்வின்துயரம் நீங்கி, சாந்தி நிலையமான நிருவாணஇன்பத்தை அடைவான். (9)

367. ஓ பிக்கு! இந்த ஓடத்தைக் காலியாக்கு; பாரம்குறைந்தால் இது இலகுவாக ஓடும். விருப்பையும்வெறுப்பையும் சேதித்துவிட்டால், நீ விடுதலைப்பேற்றை அடைவாய். (10)

368. ஐந்தை வெட்டித் தள்ளவும்; ஐந்தைக்கைவிடவும்;ஐந்தில் தேர்ந்து மேலே உயரவும். ஐந்து தளை களிலிருந்தும் தப்பிய பிக்கு 'ஓகதிண்ணா'- 'வெள்ளத்தைக் கடந்தவன்'- என்றும் சொல்லப்படுகிறான் [47] . (11)

369. ஓ பிக்கு! தியானம் செய்வாயாக, அசிரத்தையாக இருக்கவேண்டாம். உனது சிந்தனை பலன்களின் இன்பங்களில் திளைத்திருக்க வேண்டாம். அசிரத்தையினால், பழுக்கக்காய்ந்த இரும்பு உருண்டைகளை விழுங்க நேராமலும், அவைசுடும்போது 'இது துக்கம்' என்று கதறாமலும் இருக்க வழி செய்து கொள்ளவும். (12)

370. ஞானமில்லாதவனுக்குத் தியானம் இல்லை; தியானமில்லாதவனுக்கு ஞானம் இல்லை. தியானமும், ஞானமும் சேர்ந்திருப்பவனே நிருவாணத் தின் பக்கம் இருக்கிறான். (13)

371. சாந்தியடைந்த உள்ளத்துடன் ஒரு பிக்கு காலியா யுள்ள ஒரு மனைக்குள் சென்றால், தருமத்தைஅவன் மெய்க் காட்சியுடன் தெரிந்திருப்பதன்மூலம், மனிதர் அடைவதற்கு அரிதான இன் பத்தை அடைகிறான். (14)

372. அவன் (உடலின் தோற்றத்திற்குக் காரணமா யுள்ள மூலப் பொருள்களான) ஸ்கந்தங்களின்சேர்க்கையையும்,

பிரிவையும் பற்றித் தெளியும்போதெல்லாம், இன்பமும், மகிழ்ச்சியும் அடைகிறான், அறிந்தவர்களுக்கு அதுவே நித்தியமானவாழ்வு. (15)

373. அறிவுள்ள பிக்குவுக்கு இதுவே அடிப்படையானமுறை; புலன்களை அடக்குதல், திருப்தி, தருமத் தின்படி காத்துக்கொள்ளல், புனித வாழ்வு,பெருமை, ஊக்கம். (16)

374. அவன் யாவர்க்கும் இனியவனாக வாழ்வானாக;தன் கடமைகளைத் திறமையுடன் நிறைவேற்றிவருவானாக;பின்னர் அவன் தனது இன்ப நிறை வாய் துன்பத்தை ஒழித்து விடுகிறான். (17)

375. பிக்குக்களே! வஸ்ஸிகைச் செடி வாடிப்போனமலர்களை உதிர்த்து விடுவதுபோல் நீங்களும்விருப்பு வெறுப்புக்களைக் கைவிட்டு விட வேண்டும். (18)

376. உடலில் அமைதி, பேச்சில் அமைதி, உள்ளத்தில் அமைதியுடன் நிதான நிலைபெற்று, உலகின்ஆசைத் தூண்டுதல்களை ஒழித்த பிக்குவே உப சாந்தி பெற்றவன் என்று கூறப்படுவான். (19)

377. ஓ பிக்கு! உன்னை நீயே தூண்டிக்கொள்; உன்னை நீயே சோதனை செய்துகொள்;உன்னை நீயே தற்காப்புச் செய்து கவனமா யிருந்தால், நீ இன்புற்று வாழ்வாய். (20)

378. ஒருவன் தனக்குத்தானே தலைவன், தனக்குத்தானே புகலிடம்.ஆதலால் வணிகன் உயர்ந்தகுதிரையை அடக்கிப் பழகுவதுபோல உன்னைநீயே அடக்கிப் பழகவும். (21)

379. மன மகிழ்ச்சியோடும், அமைதியோடும், புத்ததருமத்தில் நம்பிக்கை கொண்ட பிக்கு (துயர மான) வாழ்வை நீத்து இன்பமயமான சாந்திநிலையை அடைவது திண்ணம். (22)

380. இளவயதாயிருப்பினும், புத்த தருமத்தில் மனமகிழ்ச்சியுடன் ஈடுபடும் பிக்கு, மேகத் திரையிலிருந்து விடுபட்ட வெண்மதி போல, இவ்வுலகில் ஒளியைப் பரப்புகிறான். (23)

381. ஓ பிராமணா! வீரத்துடன் எதிர்த்து வெள்ளத்தைத்தடுத்து நில்; ஆசைகளை விரட்டிவிடு. படைக்கப்பட்ட எல்லாம் அழிவடையும் என்பதைஉணர்ந்த பிறகு, படைக்கப் பெறாததை நீஅறிவாய். (1)

382. (தன்னடக்கம், ஆன்மஞானம் என்ற) இரண்டுதருமங்களிலும் அக்கரை கண்ட பிராமணனுக்கு அனைத்தையும் அறியும் ஆற்றலுள்ள அவனுக்குப் பந்தங்கள் யாவும் ஒழிகின்றன. (2)

383. எவனுக்கு இக்கரையுமின்றி, அக்கரையுமின்றி [48] இரண்டுமில்லையோ, எவனுக்கு அச்சமும்,கட்டுக்களும் ஒழிந்தனவோ, அவனையே நான்பிராமணன் என்று கூறுவேன். (3)

384. எவன் தியானத்துடன் உள்ளானோ, ஆசைகளற்றவனோ, நிலையான அமைதியுள்ளவனோ கடமைகளைச் செய்து முடிப்பவனோ, எவன் மாசற்றவனோ, எவன் உத்தமமான ஞானியின்முடிவான நிலையை அடைந்தவனோ, அவனையே நான் பிராமணன் என்று அழைப்பேன். (4)

385. ஆதித்தன் பகலில் ஒளி கொடுக்கிறான். சந்திரன் இரவை ஒளி செய்கிறான்; போர் வீரன் கவசம் அணிந்து பிரகாசிக்கிறான்; பிராமணன் தியானத் தில் பிரகாசிக்கிறான்; புத்தர் இரவும் பகலும் எல்லாப் பொருள்களையும் தம் ஞான ஒளியால்பிரகாசிக்கச் செய்கிறார். (5)

386. ஒருவர் பாவத்தை ஒழித்ததால் பிராமணன் என் கிறோம்; சாந்தியில் வாழ்வதால் சமணன் என்கிறோம்; மலங்களை வென்றதால் மலமற்றவன் (ப்ரவ்ராஜிதா) என்கிறோம். (6)

387. பிராமணனை எவரு0ம் தாக்குதல் தகாது; தாக்கப்பட்ட பிராமணன் தாக்கியவன் மீது பாய்தலும் தகாது. பிராமணனைக் கொல்வோன் பழிக்கு ஆளாவான்;

அத்தீயோனிடம் கோபத்தைச் செலுத்துவோன் அதிகப் பழிக்கு ஆளாவான். (7)

388. வாழ்க்கையின் இன்பங்களில் மனம் ஆழ்ந்து விடாதபடி அடக்குதல் பிராமணனுக்குச் சாமானியமான சிறப்பன்று; எங்கெல்லாம் மற்றவர்களுக்கு ஹிம்சைசெய்யும் எண்ணம் அடக்கப்படுகிறதோ,அங்கெல்லாம் துக்கம் தொலைந்து போகிறது. (8)

389.
மெய், வாய், மனம் ஆகிய மூன்றிலும் அடக்க முள்ளவனையே நான் பிராமணன் என்று சொல் வேன்.

(9)

390.
பூர்ண ஞானம் பெற்ற புத்தர் (ஸம்மா ஸம்புத்த)உபதேசித்த தருமத்தை உணர்ந்தவனை, பிராமணன் வேள்வியில் அக்னியை வணங்குவது போல் மக்கள் வணங்க வேண்டும்.

(10)

391.
ஒருவன் பிராமணனாவது சடைத்தலையால்அன்று; தன் கோத்திரத்தால் அன்று; பிறப்பினாலும் அன்று; எவனிடம் சத்தியமும், தருமமும் நிலைத்துள்ளனவோ, அவனே பாக்கியவான்.அவனே பிராமணன்.

(11)

392.
மூடனே! சடைத்தலையாலும், மான்தோல் ஆடையாலும் என்ன பயன்? புறத்தை நீ தூய்மை செய்கிறாய்; என் அகமோ தீமைகள் நிறைந்தகாடாக இருக்கிறது.

(12)

393.
பிறர் கழித்து நீக்கிய வஸ்திரங்களை அணிந்து, உடல் மெலிந்து, நரம்புகள் தெரியும்படி உலர்ந்து, வனத்திலே ஏகாந்தமாகத் தியானம் செய்பவ னையேதான் பிராமணன் என்று சொல்வேன்.

(13)

394.
தாயைக் கொண்டோ, குலத்தைக் கொண்டோ ஒரு மனிதனை நான் பிராமணன் என்று கூறுவதில்லை. அவன் செல்வனாயிருந்தால், போவாதி [49] என்று அழைக்கப்படுவான்; ஆனால் ஏழையாய்ப் பொருளாசையும் இல்லாமலிருந்தால் அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன்.

(14)

395.
சகல பற்றுக்களையும் சேதித்தவன், அச்சமற்றவன், உறவு பந்தங்களிலிருந்து விடுபட்டவன்,(அசத்தியத்திலிருந்து) ஒதுங்கியவன் எவனோ,அவனையே நான் பிராமணன் என்று சொல் வேன்.

(15)

396.
தன்னைப் பிணித்துள்ள (துவேஷமாகிய) தோலையும், (ஆசையாகிய) வாரையும், (போலிச் சமயக் கொள்கைகளாகிய) சங்கிலியையும், (அஞ்ஞான மாகிய) குட்டையையும் அறுத்துக் கொண்டுபோதியடைந்தவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (16)

397. தான் ஒரு குற்றமும் செய்யாதிருந்தும் தனக்குக்கிடைக்கும் வசைகளையும், அடிகளையும், சிறைத் தண்டனையையும் பொறுமையோடு ஏற்றுக் கொண்டு பொறுமையே தன் ஆற்றலாகவும், பலங்களே [50] தன் சேனைகளாவும் பெற்றுள்ளவன்எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (17)

398. வெகுளியை விட்டவன், கடமைகளிலே கவன முள்ளவன், ஒழுக்க விதிகளின்படி நடப்பவன்,பரிசுத்தமானவன், தன்னடக்க முள்ளவன்எவனோ, எவன் இவ்வுடலைக் கடைசி உடலாகக்கொண்டுள்ளானோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (18)

399. தாமரை இலைமேல் தண்ணீர் போலவும், ஊசிமுனை மேல் கடுகு போலவும், இன்பங்களோடு ஒட்டாமலுள்ளவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (19)

400. இந்தப் பிறவியிலேயே தன் துக்கங்கள் அழிந்தொழியும் என்று அறிந்து, தன் (பாவச்) சுமைகளை எறிந்து விட்டவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்பேன். (20)

401. ஆழ்ந்த ஞானமும், மேதாவிலாசமும் பெற்றவன்;நன்மார்க்கத்தையும், துன்மார்க்கக்தையும் அறிந்தவன், மெய்ப் பொருளை அடைந்தவன் எவனோ. அவனையே நான் பிராமணன் என்றுசொல்வேன். (21)

402. இல்லறத்தார், துறவறத்தார் இருவருடனும் கலந்து கொள்ளாமலும், அடிக்கடி. (பிறருடைய) வீடுகளுக்குச் செல்லாமலும், தேவைகளைக் குறைத்துக் கொண்டும் வாழ்பவன் எவனோ,அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (22)

403. நிற்பனவும், திரிவனவுமாகிய எவ்வுயிரையும் துன் புறுத்தாமலும், வதைக்காமலும், வதைக்கக்

காரணமாயில்லாமலும் எவன் உள்ளானோ,அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (23)

404. பகைமை உணர்ச்சியுள்ளவர் நடுவே பகைமை யற்றும், தடியெடுத்து நிற்போர் நடுவே சாந்தியுடனும், ஆசையுடையோர் நடுவே ஆசையற்றும் உள்ளவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (24)

405. எவனுடையராகத் துவேஷங்களும், கர்வமும்,கபடமும் ஊசி முனையிலிருந்து உருண்டு விழும்கடுகு போல் ஒழிந்து விட்டனவோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (25)

406. உண்மையே பேசுவோன், இன்சொல்லும், தெளிந்தபொருளும் விளங்கப் பேசுவோன், எவர் மனமும்நோவாமல் பேசுவோன் எவனோ அவனையேநான் பிராமணன் என்று சொல்வேன். (26)

407. இந்த உலகில் தனக்கென்று அளிக்கப்படாத எதை யும்-அது நெடியதோ, குறுகியதோ, பெரிதோ,சிறிதோ, நல்லதோ, கெட்டதோ-ஏற்றுக்கொள் ளாதவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (27)

408. இகத்திலும், பரத்திலும், எதிலும் ஆசையற்றவன்,எதிலும் நாட்டமற்றவன், தளைகளற்றவன்எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (28)

409. எவனுக்கு வேட்கையில்லையோ, ஞானத்தால் ஐயங்கள் தீர்ந்து விட்டனவோ, எவன் நித்தியமான மெய்ப்பொருளில் ஆழ்ந்துள்ளானோ - அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (29)

410. எவன் இவ்வுலகில் புண்ணிய, பாவங்களைப் பற்றிய தொடர்புகளுக்கு அதீதமாய்ச் சென்றவனோ, எவன் சோகமின்றி, உணர்ச்சி வெறிகளைக் கை விட்டுத் தூய

நிலையிலுள்ளானோ,அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (30)

411. எவன் சந்திரனைப்போல் களங்கமற்றும், பரிசுத்த மாயும், தெளிவாயும், கலக்கமில்லாமலும் விளங்கு கிறானோ, எவனிடம் உல்லாசம் அறவே அழிந்துவிட்டதோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (31)

412. பிறப்பு, இறப்புக்களும், மயக்கமும் உள்ள கடத்தற்கு அரிய இந்தச் சேற்றுப் பாதையைத்தாண்டி மறு கரையை அடைந்தவன், தியான முள்ளவன், கலக்கமற்றவன், ஐயமற்றவன்,எதையும் பற்றாதவன், சாந்தி பெற்றவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்றுசொல்வேன். (32)

413. இவ்வுலகில் புலன் இன்பங்களைத் துறந்து, தங்குவதற்கு ஒரு வீடில்லாமல் திரிகின்றவன், (உட லோடு) வாழும் வாழ்வின் ஆசை அனைத்தையும் களைந்தவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (33)

414. இவ்வுலகில் அவா அனைத்தையும் அவித்துத்(தங்குவதற்கு) ஒரு வீடில்லாமல் திரிகின்றவன், (உடலோடு) வாழும் வாழ்வின் ஆசைகள் அனைத்தையும் களைந்தவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (34)

415. மானிடரின் போகங்களையும், தெய்விகமான போகங்களையும் உதறிவிட்டு, எல்லாப் பற்றுக்களிலிருந்தும் விலகியவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (35)

416. இன்பமானவற்றையும், துன்பமானவற்றையும் கைவிட்டு அமைதி பெற்றவன், (மறு பிறப்புக்குக்காரணமான கர்ம) வித்துக்களை ஒதுக்கியவன்,சகல உலகங்களையும் வென்ற வீரன்

எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (36)

417. எங்கும் உயிர்கள் அழிவதையும், அவைகளின் தோற்றத்தையும் அறிந்தவன், பற்றற்றவன், நல்வழி நடப்பவன், போதியடைந்தவன் எவனோ,அவனையே நான் பிராமணன் என்று சொல் வேன். (37)

418. எவனுடைய பாதையைத் தேவர்களும், கந்தர்வர்களும், மானிடர்களும் அறியார்களோ, எவன் குறைகள் நீங்கி அருகத் நிலையை அடைந்துவிட்டானோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (38)

419. எவனுக்கு முன்னாலும், பின்னாலும், இடையிலும் எதுவும் இல்லையோ; எப்பொருளுமின்றி எவ்விதப் பற்று மின்றியிருக்கிறானோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (39)

420. காளைபோல் வீரமுள்ளவன், பெருந்தன்மை யுள்ளவன், தீரன் ஞான முனிவன், (மரணத்தை) வென்றவன், பாவமற்றவன், கல்வியில் பூர்த்தி பெற்றவன், போதியடைந்தவன் [51] எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (40)

421. தன்னுடைய முந்திய ஜன்மங்களை அறிந்தவன், சுவர்க்கத்தையும், நரகத்தையும் அறிந்தவன், பிறவிகளின் எல்லையை அடைந்தவன், அறிவு நிறைந்த முனிவன், நிறைவேற்ற வேண்டியவை அனைத்தையும் நிறைவேற்றி முடித்தவன் எவனோ, அவனையே நான் பிராமணன் என்று சொல்வேன். (41)

## தம்ம பதம் முற்றிற்று

# அனுபந்தம் - I

## நால்வகை வாய்மைகள்

பௌத்த தருமத்திற்கு அடிப்படையான நான்கு உன்னத உண்மைகள் அல்லது சத்தியங்கள்; துக்கம், துக்க காரணம், துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் ஆகியவை.

1. துக்கம் - உலகில் பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு எல்லாம் துன்பம்; நண்பர்களைப் பிரிதல் துன்பம்; அன் பற்றவர்களின் தொடர்பு துன்பம்; விரும்பியதைப் பெறாமை துன்பம்; ஐம்புலன்களின் வழியே அறிந்து ஆசை கொண்ட யாவும் துன்பத்திலேயே முடிகின்றன. துக்கத்திற்கு மூலகாரணம் பேதைமை; பேதைமையி லிருந்து செயல், செயலிலிருந்து உணர்வு; உணர்வி லிருந்து உருவமும், அருவமும், இவைகளிலிருந்து உணர்ச்சிக்குரிய வாயில்கள், வாயில்களிலிருந்து ஊறு (ஸ்பரிசம்). இதிலிருந்து நுகர்வு, நுகர்விலிருந்து. வேட்கை வேட்கையிலிருந்து பற்று, பற்றிலிருந்து கர்மத் தொகுதி, கர்மத்திலிருந்து பிறப்பு, பிறப்பிலிருந்து உபாதைகள் தோன்றுகின்றன.

2. துக்க காரணம் - சகல துக்கங்களுக்கும் காரணம் ஆசை அல்லது அவர்தான். இதைத் 'திருஷ்ணை' என்பர்.

3. துக்க நிவாரணம் - ஆசையை ஒழித்து அவித்து விடுதலே துக்கத்தை ஒழிக்கும் மருந்து.

4. துக்க நிவாரண மார்க்கம் - பரிசுத்தமான எட்டு உறுப்புக்களையுடைய அஷ்டாங்க மார்க்கமே துக் கத்தை நீக்கும் வழி. எட்டு அங்கங்களாவன;

1. நற்காட்சி - ஸம்மாதிட்டி
2. நல்லூற்றம் - ஸம்மா ஸங்கல்ப
3. நல்வாய்மை - ஸம்மா வாசா
4. நற்செய்கை - ஸம்மா கம்மந்த
5. நல்வாழ்க்கை - ஸம்மா ஜீவ

6. நல்லூக்கம் - ஸம்மா வாயாம
7. நற்கடைப்பிடி - ஸம்மா ஸதி
8. நல்லமைதி - ஸம்மா ஸம்மதி

1. நற்செய்தி; துக்கம் முதலிய நான்கு வாய்மை களையும் உணர்தல், பாவ புண்ணியங்களைப் பகுத்தறி தல்; உலகின் நிலையாமையைக் கண்டு மெய்ப் பொருளை அறிதல்.

2. நல்லூற்றம்; அவாவை அறுத்து, துவேஷம், கொடுமை முதலியவற்றிலிருந்து மனத்தைப் பாதுகாத்தல்.

3. நல்வாய்மை; பொய், புறங்கூறல், இன்னாச் சொல், பயனற்ற பேச்சு முதலியவற்றை நீக்கி, வாய்மை, அடக்கம், இன்சொல், பயனுள்ள அற ஆராய்ச்சி முதலிய நற்பண்புகளை வளர்த்தல்.

4. நற்செய்கை; உயிர்க்கொலை, களவு, பிறர் மனை விழைதல், பொறாமை, வெகுளி முதலிய தீமை களை விலக்கி நல்லொழுக்கத்துடன் வாழ்தல்.

5. நல்வாழ்க்கை; வாழ்வுக்கு வேண்டிய பொருள் களைத் தீயநெறியில் அல்லாமல் நீதியான முறையில் உழைத்துப் பெறுதல்.

6. நல்லூக்கம்; நன்முயற்சி. இம்முயற்சி நான்கு வகைப்படும். மனத்தில் தீய எண்ணங்கள் எழாமல் காத்தல், முன்னால் எழுந்த இழிவான எண்ணங்களை அடக்கி வெல்லுதல், நல்லெண்ணங்கள் உதிப்பதற்கு ஏற்ற வழிகளில் கருத்து வைத்தல், உதித்த நல்லெண் ணங்களைப் பேணி வளர்த்தல்.

7. நற்கடைப்பிடி; கருத்துடைமை, உடலைப்பற்றி யும் உணர்ச்சி பற்றியும், உள்ளத்தைப் பற்றியும், உலக இயற்கை பற்றியும் ஆழ்ந்து சிந்தித்து, ஆராய்ந்து, உண்மையை உணர்ந்து, அதை இடைவிடாது போற்று தல். வனத்திலோ, மரத்தடியிலோ, ஏகாந்தமான ஓரிடத் தில் அமர்ந்து ஒருவன், தன் உடலையும், பிறர் உடல் களையும் பற்றிச் சிந்தித்து, உண்மையை அறிய முடியும்; சுவாசப்

பயிற்சி இதற்கு உதவியாம். இது போலவே உணர்ச்சி, உள்ளம், இயற்கை பற்றியும் அறிந்து, ஆசை, கோபம், மடிமை, அமைதியின்மை, கவலை, சந்தேகம் முதலிய தடைகளை நீக்கவேண்டும். இவைகள் எப்படித் தோன்றுகின்றன என்பதைத் தெரிந்து அடக்கி வந்தால் பின்னால் இவை தோன் றாமலே ஒழிகின்றன. அறிவுள்ள பிராணிகள் யாவும் ஐந்து ஸ்கந்தங்களின் சேர்க்கையால் உண்டானவை யாதலால், அவைகளைப் பற்றிச் சீடன் சிந்திக்க வேண்டும். உருவம், உணர்வு, அறிவு, சிந்தனை, விஞ்ஞானம் என்ற சைதந்ய உணர்ச்சி ஆகிய ஐந்து ஸ்கந்தங்களும் தோன்றி மறையும் இயல்பை அவன் உணர்வான். ஐம்புலன்களோடு மனத்தையும் சேர்த்து ஆறு புலன்களால் உண்டாகும் ஆறுவகை உணர்வையும் அறிந்து, அவற்றின் சார்பால் பந்தம் தோன்றுவதைத் தெரிந்து கொள்வான், பின்னர் உண்மையான ஞானத்தை அடைவதற்குரிய சாமர்த்தியம், ஞாபகம், மனனம், சாஸ்திர ஆராய்ச்சி, ஆனந்தம், சாந்தி, சமதிருஷ்டி ஆகிய ஏழு கருவிகளையும் பயன்படுத்திக் கொள்வான். இவைகளால் ஞானமும், விடுதலையும் சித்திக்கும்.

8. நல்லமைதி; உள்ளத்தை ஒரு நிலைப்படுத்தல், இதனால் உண்மையை அறிவதைத் தடுக்கும் ஆசை, துவேஷம் முதலிய ஐந்து தடைகளும் நீங்கி, இன்பமும், தியானமும் நிலைத்து நிற்கும்; உள்ளம் அமைதி பெறும், விருப்பு வெறுப்புக்களற்ற சித்த நிறைவு ஏற்படும்; பின்னர் இன்பத்திற்கும், துன்பத்திற்கும் அப்பாற்பட்ட விடுதலையான பேரின்ப நிலை ஏற்படும்.

மேலே கூறிய அடிப்படையான நான்கு வாய்மை களையும் ஏற்றுக்கொண்டவனே பௌத்த தருமத்தைப் பின்பற்ற முடியும். இந்தத் தருமத்தை மேற்கொள்பவன் தனியாக நின்று எதிலும் வெற்றி பெற முடியாது என்ப தால், மூன்று புகலிடங்கள்-சரணங்கள்-ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. புத்தர், பௌத்த அடியார்களின் சங்கம், பௌத்த தருமம் ஆகிய மும்மணிகளே அந்தச் சரணங்கள்,

பௌத்த தருமத்தை மேற் கொள்பவன் ஆரம்பத்திலேயே இச்சரணங்களை மேற்கொள்வான்.

புத்தம் சரணம் கச்சாமி!
புத்தம் சரணம் கச்சாமி!
புத்தம் சரணம் கச்சாமி!

# அனுபந்தம் - II

## முப்பத்தாறு நதிகள் (ஆசைகள்)

மனிதனுக்குரிய பொறிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம் ஆகிய ஆறு; இந்த ஆறு பொறிகளும் ஆறு வாயில்கள். இவை வெளியேயுள்ள பொருள்களின் தோற்றமான உருவத்தை(ரூபம்) அகத்திலே உணரும் குணத்தையும் (நாமம்) அறிய உதவுகின்றன. இந்த ஆறு பொறிகளும் தீண்டுதல், சுவை, உருவம், மணம், கேள்வி, நினைப்பு ஆகிய 'ஷடாயதனங்கள்' என்ற ஆறு புலன்களின் வழியே செயற்படும்போது, ஆசைகள் ஏற்படுகின்றன. கண் இனிய உருவத்தைக் காண விரும்புவது போலவும், மனம் இனிய கருத்துக்களை எண்ண விரும்புவது போலவும், ஒவ்வொரு பொறியும் ஓர் ஆசையுள்ளது. ஒவ்வோர் ஆசையும் மூன்று பிரிவானது; வெறும் புலன் இன்பத்தை விரும்புவது, அழியாமல் நித்தியமாக இருக்க விரும்புவது, அநித்திய மாக இருக்க விரும்புவது. எனவே பொறிகளின் ஆசை கள் 6X3=18; இவை போலவே ஆறு புலன்களின் ஆசை களும் 6X3=18; ஆக மொத்தம் 36 ஆசைகள் என்று 'விசுத்தி மார்க்கம்' கூறும்.

இறந்த கால ஆசைகள் 36, நிகழ்கால ஆசைகள் 36, எதிர்கால ஆசைகள் 36 என்று 108-ஆசைகளும் கணக்கிடப்படும். இவைகளின் மூலாதாரமான ஆசைகள் தீண்டுதல், சுவை, உருவம் முதலிய ஆறுதான். இந்த ஆறையும் மேலும் சுருக்கிப் புலன் இன்பம், நித்திய வாழ்வு, அநித்திய வாழ்வு ஆகிய மூன்றையும் பற்றிய மூன்றே ஆசைகளாகக் குறிப்பிடுவது உண்டு.

# அனுபந்தம் - III

## ஐந்து தளைகள்

வெட்டித் தள்ளவேண்டிய ஐந்து;

1. உடம்பு உண்மையென்னும் எண்ணம் (ஸத்காய திருஷ்டி)
2. சந்தேகம் (வீசிகித்ஸை)
3. பயன் கருதிச் செய்யும் விரதங்கள் (சீல விரதம்)
4. புலன் அநுபவிக்கும் விஷய விருப்பம் (காமம்)
5. கோபம் (ப்ருதிகை)

கைவிட வேண்டிய ஐந்து;

1. உருவம் பெறும் ஆசை (ரூபராகம்)
2. உருவம் பெறாமல் வேறு உலகங்களில் வாழ இச்சித்தல் (அரூப ராகம்).
3. கர்வம் (மானம்)
4. தற்புகழ்ச்சி (ஔத்தத்தியம்)
5. அறியாமை (அஜ்ஞானம்)

மேலே கூறிய பத்து மனோபாவங்களும், ‘தசஸம்யோஜனங்கள்’ எனப்படும். ஸம்யோஜனங்கள்- விலங்குகள். இந்த மனோபாவங்களால் உலக வாழ்வில் பற்று உண்டாகின்றது.

தேர்ந்து மேலே உயரவேண்டிய ஐந்து (பஞ்ச பலங்கள்);

1. சிரத்தை
2. சாமர்த்தியம்
3. ஞாபகம்
4. மனனம்
5. ஊகித்தல் அல்லது ஞானம்.

கடக்க வேண்டிய ஐந்து தளைகள்;

1. அவா (ராகம்)
2. வெறுப்பு (துவேஷம்)
3. மயக்கம் (மோஹம்)

4. கர்வம் (மானம்)
5. பொய்க்காட்சி (திருஷ்டி)

இந்த ஐந்துக்கும் பதிலாக உருவம் (ரூபம்), உணர்ச்சி (வேதனை), நினைப்பு (ஸம்ஜ்ஞை), முற்குறிப்பு (ஸம்ஸ்காரம்), அறிவு, (விஞ்ஞானம்) என்ற ஐந்து ஸ்கந்தங்களையும் கூறலாம்.

# அனுபந்தம் - IV

அநாத்மம் - ஆன்மா அற்றவை. இந்தச் சூத்திரத்திற்குப் பலவாறு பொருள் உரைக்கப்படுகிறது. மூலத்தில் 'ஸப்போ தம்மா அநந்தா' - அதாவது 'ஸர்வ தர்மம் அநாத்மம்' என்று கூறப்பட்டுள்ளது. 'தர்மம்' என்பதற்கு என்ன பொருள் கொள்வது என்பதே முக்கியம். 'ஒருவர் உருவங்கள் யாவும் மாயை' என்றும், மற்றொருவர், 'ஜந்துக்களின் குணம், செயல்கள் ஆன்மா இல்லாதவை' என்றும், 'உயிர் வாழ்தலுக்குக் காரணமான தாதுக்கள் (ஸ்கந்தங்கள்) யாவும் ஆன்மா அற்றவை' என்று வேறு ஒருவரும் குறிப்பிடுகின்றனர்.இந்தச் சூத்திரத்திற்கு முந்திய இரண்டு சூத்திரங்களையும் தொடர்ந்து பொருளுரைத்தலே பொருத்தமாகும். பௌத்த தருமப்படி பிரபஞ்சத்தில் தோன்றின யாவும்(பொருள்களும், ஜந்துக்களும்) அநித்தியமானவை, துக்கமானவை, ஆன்மா அற்றவை. முந்திய 277, 278 - சூத்திரங்களில் அநித்தியமும், துக்கமும் உணர்த்தப்பட்டன. இதில் அநாத்மம் விளக்கப்படுகிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் அழிவில்லாத தனி ஆன்மா ஒன்று இல்லை. உயிர் ஏகம். அந்த உயிர் வெள்ளத்தில் எழும் அலைகளே மனிதர்கள். ஒவ்வோர் அலைக்கும் தனித் தன்மை இல்லை என்பதை உதாரணமாய்க் கூறலாம்.

# அனுபந்தம் - V

உண்மையான பிராமணன் இத்தகைய பாவம் எதையும் செய்ய மாட்டான் என்பது கருத்து. இவ்வாறே அடுத்த சூத்திரத்தையும் கொள்ள வேண்டும். புத்தபகவர், தம் காலத்தில் வழங்கிய கதைகள், புராணங்கள். சாஸ்திரங்களிலிருந்து சில சிறப்புப் பெயர்களையும், சொற்களையும், கதைகளையும் எடுத்துக் கையாள்வது உண்டு. ஆனால், அவருடைய கருத்துக்களில் வேற்றுமையிருக்கும். பிரம்மா, தேவர்கள், சுவர்க்கம், நரகம் முதலிய சொற்களை அவர் உபயோகித்திருக்கிறார். சாதாரண மக்களுக்குத் தம் கருத்துக்களைஎளிதாகக் கூறுவதற்காகவே அவர் இவைகளைக் கையாண்டிருக்கிறார். உலகங்கள் யாவையும் படைத்தஒரு பிரம்மாவைப் பற்றியோ, தேவர்களைப் பற்றியோஅவர் நம்புவதுமில்லை; ஆராய்வதுமில்லை. இவை போன்ற ஒரு சொல்லே 'பிராமணர்' என்பதும், சில இடங்களில் புத்தர் பிக்குகளைப் பிராமணர் என்று கூறுவதுண்டு. பிராமண குலத்தில் பிறந்தவரை அவர் குறிப்பிடவில்லை. உண்மையான பிராமணர் எவர்கள் என்று அவர் விளக்கி யுரைத்திருப்பதை இந்நூலிலே26-வது இயலில் காணலாம். அவர் கருத்துப்படிபிராமணராயிருப்போர் ஈ, எறும்புக்குக் கூட ஹிம்சை செய்யமாட்டார்.

இந்த 5, 6- சூத்திரங்களுக்குத் 'தாய்' என்பது அவா,தந்தை என்பது 'அகங்காரம்' என்ற முறையில் விசேடஉரைகள் கூறுவதுண்டு. இப்படியெல்லாம் மறைபொருளாகக் கூறித் திகைக்க வைக்கும் முறை புத்தரிடம் அரிது.

பழைய ஹிந்துமத நூல்கள் சிலவற்றில், பிராமணன் கொலை செய்தால் பாவமில்லை என்று கூறியிருப்பதற்கும், புத்தர் கூற்றுக்கும் துளியும் சம்பந்தமிருக்க முடியாது. பௌத்த தருமத்தின்படி ஒவ்வொருவனும் தன் சிந்தனைக்கும், செயலுக்கும் தானே பொறுப்புள்ளவன். பாவ மன்னிப்பு என்பதே

கிடையாது. ஒவ்வொருவனுடைய பாவத்தையும் அவனே அனுபவித்துத் தீரவேண்டும்.

# அனுபந்தம் - VI

அவாவின் வேர் - உலக வாழ்வின் துக்கம். துக்ககாரணம், துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் ஆகிய உண்மைகளை அறியாதிருத்தலே அறியாமை (அவித்தை). அவித்தையிலிருந்து செய்கை (ஸம்ஸ்காரம்)தோன்றுகிறது. செய்கையிலிருந்து உணர்ச்சி (விஞ்ஞானம்), உணர்ச்சியிலிருந்து அருவும், உருவும் (நாமரூபம்), அருவுருவிலிருந்து ஆறு பொறிகளின் வாயில்கள் (ஷடாயதனங்கள்), வாயில்களிலிருந்து ஊறு (ஸ்பரிஸம்) ஊற்றிலிருந்து நுகர்ச்சி (வேதனை) நுகர்ச்சியிலிருந்து அவா அல்லது வேட்கை (திருஷ்ணை) உண்டாகின்றன. எனவே அவாவின் (திருஷ்ணையின்) ஆணிவேர் அறியாமை (அவித்தை.)

---

[1] இவைகளின் விவரத்தை அநுபந்தம் ஒன்றில் காண்க.

[2] திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை; ‘இலக்கிய உதயம்’, பகுதி - 2.

[3] ‘For the elucidation of Buddhism noth - ing better could happen that, at the very out - set of Buddhist studies, there should be presen ted to the student by an auspicious hand the Dhamma Pada, the most beautiful and richest collection of proverbs, to which anyone who is determine to know Buddism must over and over again return.’

[4] மாரன் - சன்மார்க்க விரோதி, சைத்தானைப் போன்றவன்; மாரன் என்று கூறப்படும் மன்மதன் அல்லன்.

[5] சீவர உடை - காஷாயம், துறவிகளின்மஞ்சள் ஆடை.

[6] சமணன் - சிரமணன் - சிரத்தையோடு பௌத்த தருமத்தை பின்பற்றுவோன். தமிழில் சமணன், ஜைன சமயத்தோரையும் சமணர் என்பது வழக்கம்.

[7] நிருவாணம் - பௌத்த தருமத்தின் முடிவான இலட்சியமான முக்தி. உலக வாழ்வில் இருக்கும்போதேஒருவர் நிருவாணமடைய முடியும். ஆசை, துவேஷம்,அறியாமை என்னும் மலங்களை அறுத்து, 'நான்' 'எனது' என்ற பற்றற்று, எல்லா

ஜீவராசிகளிடத்தும் தாயன்பு கொண்டு, வாழும் நிலை அது. இந்த நிலையிலுள்ளார் பூத உடலை நீத்துப் புகழுடம்பு பெறுதல்பரிநிருவாணம்' எனப்படும்.

[8] மகவான் - இந்திரன்.

[9] பிக்கு - பிக்ஷு - பௌத்தத் துறவி.

[10] பௌத்த தருமத்தில் பயிற்சி பெறும் சீடர்களின் தகுதிக்குத் தக்க நான்கு படிகள் உண்டு. முதற்படியிலுள்ளவன் சரோதபன்னன்; இரண்டாம் படியிலுள்ளவன்ஸக்ருரதகாமி; மூன்றாம் படியிலுள்ளவன் அநாகாமி;நான்காம் படியிலுள்ளவன் அருகத்து. இங்கு சீடன்என்றது கடைசியிலுள்ள அருகத்துப் படியை அடைந்தவனைக் குறிக்கும். அருகத்து ஜீவன் முக்தனுக்கு நிகரானவன்.

[11] தகரம் - மணமுள்ள ஒரு வகைச் செடி; இதிலிருந்து வாசனைப் பொடி தயாரிப்பதுண்டு.

[12] சிற்பக் கலைஞர் - 'எஞ்சினீயர்கள்' என்று இக்காலத்தில் அழைக்கப் பெறுவோர்.

[13] ஏழு அங்கங்கள் - ஞானத்தை அடைவதற்குரியஏழு கருவிகள்; சாமர்த்தியம், ஞாபகம், மனனம், திரிபிடக சாத்திர ஆராய்ச்சி, ஆனந்தம், சாந்தி. சமதிருஷ்டி என்பவை. இவைகளை 'ஸப்த போத்தியங்கங்கள்' அல்லது ' ஸம்போதி அங்கம்' என்பர்.

[14] ஆஸவங்கள் நான்கு; காமாஸவம், பாவாஸவம்,திட்டாஸவம், அவிஜ்ஜாஸவம். காமாஸவம் - சிற்றின்பத்தேட்டம்; பாவாஸவம் - பிறப்புக்குக் காரணமான உயிராசை; திட்டாஸவம் - கற்பனையான பொய்க் காட்சி; அவிஜ்ஜாஸவம் - அறியாமை.

[15] உபசாந்தி - இன்பத்திலும் துன்பத்திலும் சலிப் படையாத நிலை.

[16] சமணன் - சிரமணன் - சாந்தி பெற்றவன், துறவி.புத்தர் காலத்திய பிராமணரையும் சமணர் என்பது வழக்கம்.

[17] கொற்றன் - ஆசையே இங்குக் கொற்றனாகக் கூறப்படுகிறது.

[18] கட்டகப் புல் - நாணல் கொறுக்கைப் போன்ற ஒருவகைப் புல்; அதன் பூ கனியாக முதிர்ந்ததும் அது அழிந்துவிடும் என்பர்.

[19] சோதாபத்தி - நிருவாண வழியில் முதற்படி

[20] அறம் - பௌத்த தருமம். இதனை விளக்கும் நூல் 'பாதிமோக்சும்' என்பது; வடமொழியில், பிரதி மோக்ஷம்.

[21] இதன் விளக்கத்தை அனுபந்தம் ஒன்றில் காண்க.

[22] ஓடும் ஆற்றை எதிர்த்துச் செல்வோன் - உத்தமஸோதோ' அல்லது 'ஊர்த்வம் ஸ்ரோத' என்று பௌத்த நூல்களில் கூறப்படுவோன். உலகம் போகிற போக்கில் செல்லாமல் இவன் எதிர்த்துச் செல்பவன்.

[23] அதுலன் - ஒரு சீடனின் பெயர்.

[24] சாம்பூநதம் - நால்வகைப் பொன்னிலே சிறந்தது.

[25] தீவு - பிறவிக் கடலில் தவிப்பவனுக்குத் தீவு தாரகமாகும்.

[26] ததாகதர் - புத்தர், முன்னோர் (முந்திய புத்தர்கள்) வழியை மேற்கொண்டவர் என்று பொருள்.

[27] தேரன் - பௌத்தத் துறவிகளில் முதன்மையானவன்;முதியோன்; பெண்பால் - தேரி.

[28] உருவ அழகும், குண அழகும் பொருந்தியவன்.

[29] அஷ்டங்க மார்க்கம் - நற்காட்சி, நல்லூற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ்க்கை, நல்லூக்கம், நற்கடைப்படி, நல்லமைதி என்ற எட்டுப்பிரிவுகளுள்ள மார்க்கம். இவை பற்றிய விளக்கத்தை அனுபந்தம் ஒன்றில் காணலாம்.

[30] நான்கு வாய்மைகள் - துக்கம், துக்க காரணம், துக்க நிவாரணம், துக்க நிவாரண மார்க்கம் என்ற உண்மைகள்.

[31] வைராக்கியம் - வெறுப்பு. ஆசைகளை வெறுத்து ஒதுக்கல்.

[32] ஞானக்கண் - உண்மையை ஊடுருவிப் பார்க்கும் சக்தி.

[33] மாரனுடைய பந்தங்கள் - பாவம், மரணம் முதலியவை.

[34] விசுத்தி மார்க்கம்-மிகவும் பரிசுத்தமான வழி.

[35] அநாத்மம் - ஆன்மா அற்றவை. இந்தச் சூத்திரத்திற்குப் பலவாறு பொருள் உரைக்கப்படுகிறது. (பார்க்க:

அனுபந்தம் - IV)

[36] ஆன்ம நேயம் - தன்னை நேசித்தல், சுயநலம்.

[37] உண்மையான பிராமணன் இத்தகைய பாவம் எதையும் செய்ய மாட்டான் என்பது கருத்து. இவ்வாறே அடுத்த சூத்திரத்தையும் கொள்ள வேண்டும். (பார்க்க: அனுபந்தம் - V)

[38] கௌதமர் - புத்தர்.

[39] காட்டுப்புல் - பீரணம் அல்லது வீரணம் என்ற ஒருவகைப் புல் இங்கே கூறப்படுகிறது.

[40] இக்கிழங்கு 'உஸீரம்' என்று குறிக்கப்பெற்றிருக்கிறது; இது, வாசமுள்ளது.

[41] அவாவின் வேர் - உலக வாழ்வின் துக்கம். (பார்க்க: அனுபந்தம் - VI)

[42] இவற்றின் விவரம் அனுபந்தம் இரண்டில் காண்க.

[43] வளம் - காடு என்றும், அவா என்றும் இரு பொருளுடையது.

[44] கௌதம சித்தார்த்தர் போதியடைந்து புத்தரானதும் காசிக்கு அருகே சாரநாத்திலிருந்த தம் தோழர் ஐவருக்கு உபதேசிப்பதற்காகச் செல்லும்போது ஜைன சமயத்தைச் சேர்ந்த உபாகர் என்ற பிராமணர் அவரைச் சந்தித்தார். புத்தரின் முகப்பொலிவும், கண்களின் ஒளியும்; புனிதப் பண்பையும், பூர்ண ஞானத்தையும் தெளிவாக எடுத்துக் காட்டியதைக்கண்டு உபாகர், அவருடைய குரு யார் என்று வினவினார். அதற்குப் பதிலாகப் பகவர், ' எனக்கு நானே குரு!' என்று அறிவுறுத்த இதைக் கூறினார்.

[45] தருமதானம் - தரும உபதேசம்.

[46] மூடனைப் பிறர் அழிக்கவேண்டியதில்லை. அந்த வேலையைத் தானே பார்த்துக் கொள்கிறான். 'மற்றவர்களை அவன் அழிப்பது போல' என்றும், 'மற்றவர்களை அவன் அழிப்பதாக எண்ணிக்கொண்டு' என்றும், 'பிறன் ஒருவனைக் கொல்வது போல்' என்றும் இந்த இடத்திற்குப் பொருள் கூறுவர்.

[47] இதன் விளக்கம் அனுபந்தம் மூன்றில் காண்க.

[48] இக்கரை - புறத்தேயுள்ள ஆறு பொறிகள். அக்கரை - அகத்தேயுள்ள ஆறு புலன்கள்.
[49] போவாதி - அகங்காரமுள்ளவன்.
[50] பலங்கள் - சிரத்தை, சாமர்த்தியம், ஞாபகம், மனனம், ஊகித்தல் ஆகிய பலங்கள்.
[51] போதி - பூர்ண ஞானம்.